உ

சிவமயம்

# பனசைப்பதி

( நாட்டரசன்கோட்டை )

# தெய்வப் பா மாலை

14-2

ஆசிரியர் :

நா. கருப்பன் செட்டியார்

( ஐயாக்கருப்பன் செட்டியார் )

நாட்டரசன்கோட்டை.

வெளியிடுபவர் :

கரு. சிவ. கரு. கருப்பன் செட்டியார்

(நூலாசிரியரின் பெயரர்)

நாட்டரசன்கோட்டை

குரோதன, ஆவணி, 17உ

(2-9-1985)

உ

சிவமயம்

# பனைசப்பதி

(நாட்டரசன் கோட்டை)

# தெய்வப் பா மாலை

14-2

ஆசிரியர் :


நா. கருப்பன் செட்டியார்

(ஐயாக்கருப்பன் செட்டியார்)

நாட்டரசன்கோட்டை,



வெளியிடுபவர் :

கரு. சிவ. கரு, கருப்பன் செட்டியார்

(நூலாசிரியரின் பெயரர்)

நாட்டரசன்கோட்டை

குரோதன, ஆவணி, 17உ

(2-9-1985)

இலவச வெளியீடு



# பொருளடக்கம்

| | | பக்கம் |
| --- | --- | --- |
| | பதிப்புரை | |
| 1. | கரிகால சோழீசர் மாலை | ... 1 |
| 2. | கரிகால சோழீசர் பதிகம் | ... 8 |
| 3. | கண்ணுடையம்மை மாலை | ... 14 |
| 4, | கண்ணுடையம்மை பதிகம் | ... 22 |
| 5. | கண்ணுடையம்மை கும்மி | ... 28 |
| 6. | வேங்கடாசல மாலை | ... 41 |
| 7. | இராமாநுஜ திரிதச வெண்பா | ... 48 |
| 8. | பெரிய கருப்பண சுவாமிபேரில் பதிகம் | ... 54 |
| 9. | பின்னிணைப்பு<br>மேற்கண்ட நூல்களின் முதற்பதிப்புகளின் முன்னுரைகளும் பதிப்புரைகளும் அந்நூல்களுக்குப் பிறர் வழங்கிய சாற்றுக்கவிகளும் | ... 60 |

## பதிப்புரை

" பனசைப்பதி தெய்வப் பாமாலை " என்னும் இந்நூல் நாட்டரசன்கோட்டையில் அருளாட்சி செய்கின்ற தெய்வங்களின் மேற்பாடப்பெற்ற பாக்களாலாகிய மாலையாகும். இந்நூலில் இவ்வூரில் சிவன் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற கரிகால சோழீசரின்மேல் **பதிகம், மாலை.** இவ்வூரில் யாவர்க்கும் கண்ணளித்துக் காக்கின்ற கண்ணுத்தாள்மேல் **பதிகம், மாலை, கும்மி,** இவ்வூர்ப் பெருமாள் கோயிலிற் குடிகொண்டுள்ள பிரசன்ன வெங்கடாசலபதிப் பெருமாள்மேல் **மாலை,** இராமாநுசர்மேல் **திரிதச, வெண்பா,** பெரியகருப்பணசாமி மேல் **பதிகம்** ஆகியவை இடம்பெற்றுள்ளன.

இந்நூலின் ஆசிரியர் இவ்வூரில் ஏறத்தாழ 70 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த கருப்பன் செட்டியாராவார். இவருடைய ஆழ்ந்த தமிழ்ப்புலமை, சமயநூலறிவு, தத்துவஞானம் ஆகியவை கருதி இவர் ஐயாக்கருப்பஞ் செட்டியார் என்றழைக்கப்பெற்ருர். இவருடைய தந்தையார் நாராயணன் செட்டியாராகும் இவர் நாட்டுக்கோட்டைச் செட்டியார் மரபினைச் சேர்ந்தவர். அம் மரபினரில் இளையாற்றங்குடிக் கோவில் கழனிவாசற்குடிப் பிரிவினராவர்.

இவர் இந்நூல்களோடு குன்றக்குடிக் குமரன் பேரில் ஒரு பதிகமும் பாகனேரி புல்வாநாயகி அம்மன் பேரில் ஒரு பதிகமும் அரண்மனை சிறுவயல் மும்முடி நாகர்மேல் ஒரு பதிகமும் பாடியுள்ளார். இந்த மூன்று நூல்களையும் இத் தொகுப்பில் அடங்கியுள்ள எட்டு நூல்களையும் ஆகப் பதினேரு

நூல்களைப் பாடியுள்ளார். இப்பதினொரு நூல்களையும் தனித்தனி நூல்களாகவும் சிலவற்றைச் சேர்த்தும் முன்னர் வெளியிட்டுள்ளார்கள்.

இவ்வூரில் சிவன் கோயிலிற்குத் திருக்குட நன்னீராட்டு (கும்பாபிஷேகம்) குரோதன ஆவணி 17 ஆம் நாள் (2—9—85) அன்று நடைபெறுகின்ற பொழுது இவ்வூரில் உறையும் தெய்வங்களைப் பற்றிய எட்டுப் பாமாலைகளை வெளியிட்டால் பயனுடையதாக இருக்கும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றிற்று. அதனை அவருடைய பெயரர் கரு. சிவ. கரு. கருப்பன் செட்டியாரவர்களிடம் சொன்னேன். அவர்கள் மன முவந்து அச்சிட்டு இலவசமாக வெளியிட முன்வந்தார்கள். அதன் பயன்தான் இந்நூல்.

முன்வந்த பதிப்பில் இந்நூல்கள் அக்கால வழக்கப்படி அசை, சீர் இவைகளை நோக்கியே பிரித்து வெளியிடப் பெற்றிருந்தன. இக்காலத்து மக்கள் படித்துப் பொருள் தெரிந்து கொள்கின்றார்போன்று இப்பதிப்பில் பெருமளவு அசை, சீர் சிதையாமல், பொருள் புரிகின்றாற்போல்ச் சொற்கள் பிரிக்கப் பெற்றுள்ளன. இப்பதிப்பில் அருஞ்சொற்களுக்குப் பொருள் கொடுக்கப்பெற்றிருக்கிறது. மூல ஏடு இல்லாததால் முந்திய பதிப்பினைப் பார்த்தே அச்சிடப்பெறுகிறது. அதில் சில அச்சுப் பிழைகள் இருந்தவை திருத்தப்பெற்றுள்ளன சில இடங்களில் உள்ள பிழைகளைத் திருத்துதற்கோ, மாற்றுவதற்கோ மூல பாடம் கிடைக்கவில்லை அதனால் அவ்விடங்களில் பொருள் தெரியவில்லை. மிகக்குறுகிய காலத்தில் இந்நூல் கொணரப் பெறுவதால் இன்னும் வேண்டிய சில இடங்களுக்குப் பொருள் விளக்கம் எழுதப்பெற இயலவில்லை.

இந்நூல்களின் முதற்பதிப்பில் உள்ள பதிப்புரைகள், முன்னுரைகள், சாற்றுக்கவிகளெல்லாம் இப்பொழுதுள்ளவர்களுக்கும் தெரிந்தால் பயனுடையதாக இருக்கும் என்ற

நோக்கத்தில் அவைகளை இந்நூலின் இறுதியிற் பிற்சேர்க்கையாகக் கொடுத்திருக்கிறது.

இவ்வாசிரியரின் மக்கள் சிவசுப்பிரமணியன் செட்டியாரும், நாராயணன் செட்டியாரும் ஆவார். இருவரும் நல்ல தமிழ்ப் பற்றும் சமயப் பற்றுமுடையவர்களாவார்கள். மூத்தவர் பலரும் கூடிய சபையில் கேட்போர் பாராட்டும் வண்ணம் நயமாகப் பேசும் ஆற்றல் படைத்தவர். இளையவர் தமிழ்ப்புலமை படைத்தவர் என்பது அவர் தந்தையாரியற்றிய நூல் ஒன்றுக்குச் சாற்றுக்கவி கொடுத்துள்ளதிலிருந்து தெரியவரும். இவர்களுடைய வழித்தோன்றல்களிடம் தமிழ்ப்புலமை, சமயப்பற்றைக் காண்கிறோம். இந்நூலாசிரியரின் பெயரர் திரு. கருப்பன் செட்டியாரவர்களின் தமிழ் புரக்குந்தன்மையினை இந்நூலை வெளியிடுவதிலிருந்து தெரியலாம்.

ஒருவார காலத்திற்கு முன் இந்நூல் வெளிவரப் பெரிதும் துணையாயிருந்தவர்கள் புவனகிரியைச் சேர்ந்தவரும் சிவகெங்கை அரசர் உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியராக இருந்து ஓய்வு பெற்றவருமான வித்வான் வரதராசன் அவர்களும் நாட்டரசன்கோட்டை ச. இராம. உயர்நிலைப்பள்ளியிற் பணியாற்றித் தற்பொழுது சிவகெங்கை அரசர் மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக பணியாற்றும் வெற்றியூர் வித்வான் சுந்தரம் M.A. யும் ஆவர்கள். அவர்கள் உதவிக்கு நான் கடமைப் பட்டுள்ளேன்.

மிகமிகக் குறுகிய காலத்தில் இந்நூலை அச்சிட்டு உதவிய மதுரை சக்தி விநாயகர் அச்சுக்கூடத்தார் நம்முடைய பாராட்டிற்குரியவர்களாவார்கள்

குரோதன, ஆவணி யஎ
2—9—1985

சுப. ராம. சுப.
இராமநாதன் செட்டியார்
நாட்டரசன்கோட்டை.



நா. கரு. சிவ. கருப்பன் செட்டியார்

# திருப்பனசைச் சோழீசர் மாலை

## காப்பு

## கட்டளைக் கலித்துறை

மா.திக்கும் ஏத்துநல் தென்பனசைப்பதி வாழ்உமை,யோர்
பாதிக்கு உயர்அருள் சோழீசர் என்று பகரும்முக்கண்
சோதிக்கு உவந்தஒண் பாமாலைகூற, மெய்த் தூயவர்உள்
ஆதிக் குணக்குஞ் சரந்தாள் மலர்என் அகம்வருமே.

## நூல்

நீரார் சடைதனில் ஆராநறவம் நிறைந்த கொன்றைத்
தாரா! மலைமகள் சீரா! சதுர்மறை சாற்றுஅனந்தம்
பேராத வாத,மெய்த்தீரா! கனிந்துஉனைப் பேசவரந்
தாராய், இனிதுஅருள் கூராய், சோழீச்சுரத் தற்பரனே! (1)

[ நறவம்—தேன் ]

ஐயா! மறிமழுக் கையா! அடியர் அகத்தில்உறை
துய்யா! வெண்ணீறு அணி மெய்யா! வன்றொண்டர்தன் தூயசந்தாம்
மைஆர் விழிப்பர வையார்இல் செல்நின் மலர்அடியைக்
கையாது,எனதுஉளம் வையாய், சோழீச்சுரக் கண்ணுதலே!

[ மறி—மான்மறி; வன்றொண்டர்—சுந்தரமூர்த்தி நாயனர்; சந்தாம்—தூதாக ] (2)

காஆசனத் தன் அப்பூஆ சனத்தன் அங்கை குவிக்கும்
தேவா! எக்கால்மு மூவாது ஒளிருந் திகம்பரனே!
கூவுஆசை யால்நினை நாவால் சொலாஎனைக் கூற்று உறுங்கால்
பூஆரு நின்கழல் ஈவாய் சோழீச்சுரப் புண்ணியனே!

[காஆசனத்தன்— இந்திரன்; பூஆசனத்தன்—நான்முகன்] (3)

கண்டே மொழி,விழி வண்டே, மலர்க்குழல் கார்,பவளத்
துண்டே யிதழ்,முலை செண்டே, எனமயல் தோய்ந்துநிதம்
வண்டுஏய் கரத்தியர் தொண்டே புரிந்துமெய் வாடும்எனைப்
பண்டுஏய் வினைஅறக் கண்டுஆள் சோழீச்சுரப் பண்ணவனே!
(4)

வேதா முகுந்தர்க்கு நாதா! ஒண்வேணியின் மீதில்அணி
தாதுஆர் இதழியம் போதா! உரைப்புஅரி தானமறை
மீதுஆரு நின்புகழ் ஓதாக் கடையெற்குஉன் மெய்யருள்ஆர்
பாதாம் புயம்தொழத் தா,தா சோழீசப் பரஞ்சுடரே.

[ வேதா—நான்முகன், வேணி—சடை ] (5)

கண்ஆ யிரத்தனும் விண்ணோரும் ஏத்தக் கடல்விடத்தை
எண்ணாது அருந்திய அண்ணா, இகத்துஎளி யேன்பவத்தில்
நண்ணாது அருளுமுக் கண்ணா! திகழ்வெண்நகைத், துவர்வாய்ப்
பெண்ணாள் உமைஇடக் கண்ணா! சோழீச்சுரப் பிஞ்ஞகனே!

[ பவம்—பிறவிக்கடல்; துவர்—பவளம் ] (6)

வான்ஏய் அமரர்தம் கோனே! அடியவர் வாழ்த்துறுசொல்
தேனே! அருமருந் தானே! அரிஅயன் தேடஅரி
யோனே! உமைமகிழ் வானே! நினைத்துதித்து ஓதவரந்
தானே அருள்மகத் தானே! சோழீச்சுரச் சங்கரனே !

[ மகம் யாகம் ] (7)

அலைஆறு சூடுஐந் தலையா! மகத்துஎழும் அத்திஉரிக்
கலையா! கைலை மலையா! உலகவாழ்க் கையதனை
நிலையாம் எனமதித்து உலைஆர் மெழுகுஎன நின்றஎனை
அலையா துஅருள்பொற் சிலையா! சோழீச்சுர அற்புதனே!

[ ஆறு—கங்கை; மகம்—யாகம்; அத்தி—யானை;
கலை—ஆடை; பொற்சிலை—மேருமலையாகிய வில்] (8)

தூயா! மறையொலி வாயா! நிறைந்தநின் தொல்சரிதை
ஆயா தவர்பெரும் பேயாய் அலேந்தும் அனேவயிற்றில்
ஓயா துஉதித்துஅவர் நாயாய்உழலுவது உண்மையன்றோ,
தாயாய் உவந்துஅருள் நேயா சோழீசத் தனிமுதலே.

[ அனே—அன்னே ] (9)

விடையா! மதியஞ்சடையா! வலிவரி வேங்கையின்தோல்
உடையா! பனகவிடையா! ஒன்னார்உயிர் உண்ணும் மழுப்
படையா! இதழித் தொடையா! பணிபுரி வேற்குஅருளத்
தடையா! தென்தாலம் உடையா! சோழீசத் தயாபரனே.

[ தென்தாலம்—தென்பனசை ] (10)

அன்னத் துஉறைஅயன், வன்நத் தனும்மிக அன்புறவே
என்அத்தன் என்றுளத் துஉன்னிப் பணியநல் இன்பளித்தாய்
மன்னத் தரையினின்று உன்னேத் துதிக்க வகையறியா
என்னேத் திருத்து அருண் மன்அற் புதச்சோ ழீச்சுரனே. (11)

[நத்தன்—சங்கினேயுடைய திருமால்]

கங்கா தராஉமை பங்கா, நின்பாதம் கருது அடியார்
மங்காது அருள்புரி துங்கா, மவுலி மதிமுடித்த
சங்கா, கடையெற்கு இரங்காய் பவளத் தனுவுடைய
வங்கா, பனசைஅரங்கா, சோழீச வருட்கடலே, (12)

[மவுலி—சடை]

அத்தா, அறுகுஅணி பித்தா, அமலே தனக்கு அமைந்த
சுத்தா, முன்வேயில் உதித்தாய் எனநின்று துதிப்பவர்க்கு
முத்துஆர் கனத்த தனத்தார் மயல்அற, முத்திதருங்
கத்தா எனக்குஅரு ளேத்தா சோழீசமுக் கண்பரனே. (13)

[வேய்—மூங்கில், கத்தா—கர்த்தா]

ஏகா, வடநிழல் யோகா, கடலின் எழுந்த நஞ்சை
ஆகார மாக்கொளும் வாகா, திரிபுரம் அன்றுஎரித்த
யூகா, தனுப்பொன்னி நாகா, இமயம் உதவுகன்னி
பாகா, எனைத்தினங் காகா சோழீச்சுரப் பண்ணவனே. (14)

[ஏகா—ஒருவனே; வடநிழல்—கல்லாலமரநிழல்
பொன்னிநாகா—பொன்னிறமுடையமேருமலை]

கல்லார்கள், நன்னெறி செல்லார்கள், உன்னைக் கருதிநிதஞ்
சொல்லார்க ளே,பெரும் பொல்லார்கள் என்றுஇத் தொல்புவியில்
எல்லாரும் பேசுதல் நல்லா அறிந்துனை யேத்தமதி
இல்லா எனக்குஎதிர் நில்லாய் பனைச்சோ ழீச்சுரனே. (15)

நீதா, பெரும்புவித் தாதா, நினதுஅடி எத்தும் என்மேல்
வாதா, உகந்துஅருள் தாதா,தா, மலர்ந்தஉன் சித்தம்இரங்
காதா, பொன்னுடைகன், வேதாவும், தேடியுங் காண்பரிய
நாதா, பனித்தடம் போதா, சோழீச்சுர நாயகனே. (16)

[பொன்னுடைகன்— பொன்னாலாகிய ஆடைதரித்தவன்
திருமால் வேதா—நான்முகன்]

தெள்ஆர் அடியர்நெஞ்சு உள்ளாய், உன்நாமந் தினந்தினமும்
விள்ளாக் கசடன்என்று எள்ளா து,என்மீது வெகுளிசற்றுங்
கொள்ளாது, அரந்தையில் தள்ளாது, நன்மை கொடுத்தருள்வாய்
வெள்ளான் உறைந்திடும் வள்ளால், சோழீச்சுர வித்தகனே.

[அரந்தை—துன்பம், வெள்ளான்—வெண்ணிறவிடை]
(17)

கண்ணாக் கனல், ரவி, தண்ணார் மதியினைக் கண்டு, மதில்
எண்ணார் புரம்பொடி அண்ணா என்றே உனை யேத்தி நின்றேன்
விண்ணாரு மாலையின் அண்ணா என் வல்வினை, வேர்அறுத்து ஆள்
எண்ணான்கு அறம்புரி பெண்ணாள் இடங்கொள் சோழீச்சுரனே

[கனல்—அக்கினி, ரவி—சூரியன். புரம்—முப்புரம்,
எண்ணான்கு அறம்—32 அறங்கள்] (18)

திருமாது கேள்வர்,முன் கண்தரவே எழில் சேர்திகிரி
தருமா துங்கக்குண தற்பரனே, தவரால் விடுத்த
வரும்மா துணிந்து உரித்து அதன்அதள் போர்த்தி, என் பால்உன்அருள்
வருமா, துயர்இங்கு அறுமா, சோழீச்சுர வானவனே.

[திருமாது—திருமகள், திகிரி—சக்கரம், தவரால்—தவசிகளால் மா–யானை, அதள்—தோல்] (19)

கரும்குவ ளைக்கண், நகத்தனம், கோவைக் கனியிதழ்,நூன்
மருங்குல்,வ ளைக்கர மின்னார் மயக்கினில் வாடுகின்றேன்
சுருங்குவ ளைக்கடல் நஞ்சம்உண் டோய், நின்துதிஅடியார்
நெருங்கு,வ ளைக்கடுக் கண்ட சோழீச்சுர நின்மலனே. (20)

[நகம்—மலை, மருங்கு—இடை, வளை—சங்கு, கடுக்கண்டன்–நீலகண்டன்]

கலை,யத் தத்தா, முடி கங்கை வைத்தோய் எழிற் காசினியில்
முலையத் தத்தால்விலை செய்மாதர் மேல்மிகு மோகம் வைத்தே
அலையத் தத்தால் உழல் வேனையிங்கு ஆள்எனக்கு ஆர் துணைவே
றிலை,யத் தத், தாமரைத்தாள்ஈ பனசைச் சோழீச்சுரனே

[அத்தத்தா—அத்தனே அத்தனே] (21)

தருக்கோவை, வானவர், விண்டுவுங் கஞ்சனுந்தான் அறியோய்
திருக்கோவை, வாசகஞ் சொல்வாத ஊரர்க்குச் சீரருள்செய்
உருக்கோவை வாய்உமை பங்கா, மெய்யாய்உனை நம்பிடும்அன்
பருக்கோஐ யம்தவிர்த் தாளுஞ் சோழீசப் பரஞ்சுடரே. (22)

[தருக்கோ — கற்பகத்தருவுடைய இந்திரன்; விண்டு — திருமால்; கஞ்சன் — நான்முகன்; கோவை — கோவைப்பழம்)

தனம்விலே மாதர் தனேயே நினேந்துஇத் தரணிதனில்
நனவிலே யேநிதம் வாடுகின்றேன், உன்தன் நாமம்அதைக்
கனவில்ஐ யா,நினே யாளனே ஆளக் கைலேமலே
மனவில்ஐ யானனத் தேவா, சோழீச்சுர வானவனே. (23)

[ஐயானனம் — ஐந்துமுகம்.]

வஞ்ச மனத்தவன் ஆகிஉன் அன்பர்முன் வந்துநின்ற
வஞ்ச மனத்தடத் தாலே உரங்கெட வீட்டியவா,
கஞ்ச மணத்தவ னுடரியாய்க்கடை யேன்அவல
நெஞ்ச மனத்து அருள்தா சோழீச்சுர நின்மலனே. (24)

அம்பரம், கால், புனம் மண்தீ மதியென் றுஅயன் மகவான்,
பம்பரங், காவி, தனம்கண் டிருநெஞ்சன் பார்அண்டமே
கம்பரங் காட்டியு மாவாய லாய்கடை யேற்குஉதவ
நும்பரம் காலாந் தகனே சோழீச நுதற்கணனே.

[அம்பரம் — ஆகாசம்; கால்—காற்று] (25)

ஒருமத மாவின் உரிபோர்த்து, வாரியில் ஓங்குஉரகந்
தருமத மாங்கடு உண்டோய், வளேக்கையன் தன்மகவாய்
வருமத னுல்புரி காமா விகாரத்தில் வாடும் எனேத்
தரும தயாநிதி, வந்துஆள் சோழீச்சுரத் தற்பரனே. (26)

[உரகம் — பாம்பு; வாரி — கடல்; கடு — நஞ்சு;
வளேக்கையன் — சங்கேந்திய திருமால்; மதன் —மன்மதன்]

சூதுஅங்க மாகத் துலங்குந் திருத்தனம் சூல்நிறக்கார்
மாதுஅங்கம் பாதிஉடையாய்த் திரிபுர மாய்ப்பதற்கு
நீதங்க மாம்குன்றை நல்சிலே யாக்கினே உன் நீர்வனசப்
பாதம் கருத்தில் பதித்து ஆள் சோழீசப் பரம்பொருளே. (27)

[சூது—வட்டு ஆடுங்காய், சூல்நிறக்கார்—கருக்கொண்ட மேகத்ததுநிறம்; வனசம்—தாமரை]

மாகன கக்கிரி யைத்தனு வாக்கி,அம் வாரிதிநே
ராகன்அ கங்களி கூறவும் ஆழி யளித்து எழில்வாய்
நீகன கஞ்செலி வைத்துநின் றோய்இன்று நின்னருள்தா
கோகன கன்சிரம் கையார் சோழீசக் குணக்கடலே. (28)

[கனகக்கிரி—மேருமலே; கோகனகன்—பிரமன்
வாரிதி—கடல் திருப்பாற்கடல்; ஆசன்—உடம்பினை
யுடையோன் (திருமால்) ஆழி—சக்கரம்]

வேலா யுதன்,தனக் கேஅத்த னே,முனம் வெஞ்சமனைக்
காலா யுதம்எனக் கொண்டுஅன்று வீட்டிய கண்நுதலே
மேல்ஆ யு,தம் அடியார்க்குஅருள் நாயக, மேவும்என்பான்
மாலாய் உதவு பனசைச்சோ ழீச்சுர வானவனே. (29)

[சமன்—எமன்; ஆயு—ஆராய்கின்ற

மா,கா மனேக்கணி ளுல்நீறு எனச்செய்த மான்மறிக்கை
ஏகா. மன்உம்பருக் காய்க்கடு உட்கொண்டு இசைமிகுந்த
வாகா, மருட்சமன் வந்துஅடி யேனே வருத்துதற்குஆள்
ஆகாமல் நல்வரந் தந்துஆள் சோழீச்சுர வற்புதனே. (30)

பெருமா தங்கத்தின் எதிர்தோன்றி ஆயாள்அரி பின்னே
யெனும்
உருமா துஅங்கத்துற, நீர்வேணி சூடிமுன் உம்பருக்கா
அரு,மா தங்கக்கிரி வில்லாக்கி உன்தன் அருள் எனக்கு
வருமா தங்கத்தலம் ஈவாய் சோழீச்சுர வானவனே, (31)

[மாதங்கம்—யானே—கம்சனுல் ஏவப்பெற்ற யானே
அரி—திருமால்; பிள்ளே—தங்கை]

திருப்பனசைச் சோழீசர் மாலே முற்றிற்று.

உ
கணபதி துணை

# திருப்பனசைச் சோழீசர் பதிகம்

காப்பு வெண்பா

ஆழிசுரந் து,ஏறுகடு அம்மிடற்றி லேஅடைத்த
சோழீசு ரர்பதிகஞ் சொல்லவே—பாழிமதம்
அஞ்சுகரத் துஅந்திநிறத் துஆதியும் அநாதியுமாங்
குஞ்சரம்என் றும்துணையா கும்.

[ஆழி—கடல். கடு—நஞ்சு, மிடறு—கழுத்து.
அஞ்சுகரம்—ஐந்துகை; அந்தி – மாலைக்காலம்]

ஆசிரிய விருத்தம்

சங்கரா, சம்புசிவ, சர்வபரி.பூரண சண்டனை உதைத்த பாதா,
தற்பர சதானந்த சகள நிஷ்கள விமல தபனன்அரி இந்துகண்ண
சங்கநிறை யிறைவனே, எங்கும்உறை குரவனே, தான்ஆன சர்வேஸ்வரா
சடையனே, விடைஊர்தி, சுடலைதனில் ஆடிய தனிப்பரம நாதசோதி,
துங்கமறை யானவா, மாரனை எரித்துத் துலங்கு அட்டமூர்த்தி யாகித்
தூயநீ றுஅணிந்திடு திகம்பர, புராரியே சொல்லரிய மலைவில்லியே
கங்கா தரா,எனைக் காத்துஇரட் சிக்கநல் கருணையின் றுஅருள் புரிகுவாய்
கமலமிசை தவழ்வளைகள் நிறை பனசைய தனில் உறை கடவுள் சோழீசபரனே.

[அரி—நெருப்பு; இந்து—சந்திரன்; குரவன்—மேலானவன், வளைகள்—சங்கு] (1)

அம்புலி யுடன்,கொக் கு,எருக்கு. அறுகு கொன்றை,கூ
விளம், ஏனம்மாமருப்பும்
அக்கு.மணி யுங்,கங்கை மிக்கதிரு வேணிமிசை
ஆவலுடனே தரித்தும்
வெம்புகரி மேலுரி யுடுத்துஉரக மானபணி விரைவாக
வேயணிந்தும்
வேங்கையை உரித்துமழு, மானினையிசைத்துமா
விண்டுவுக்குஆழி யீந்துங்
கும்பலுட னேநின்ற முப்புரந் தனைமுனம் குறுநகையி
னுல்எரித்துக்
கோலமுறு நாரிஒரு பாகம் அதனில்கொண்டு கோகனகம்
உற்றபிரமன்
கம்,பதும மாமலர்க் கைமீதி லேந்தியே கருணைவைத்து
எனையாளுவாய்
கமலமிசை தவழ் வளைகள்நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசபரனே. (2)

[வேணி—சடை; கரி—யானை; உரி—தோல்;
உரகம்—பாம்பு; விண்டு— திருமால்; ஆழி—சக்கரம்;
நாரி—உமை; கோகனகம்—தாமரை; கம்—தண்ணீர்]

திருமருவு கணிகையர் குலத்துவரு பரவையார் செய்யகடை
வாயில் தனிலும்,
திகழ்சதத் தலையன்உர மாறவே நாயகச் செவ்உகிரினுல்
அடர்த்தும்,
அருமறைச் சிரமீது நின்றும்,அரி கேழலாய் அறியஅரி
தாய் இருந்தும்,
அந்தணர் குலச்சிறுவ ன்நின்றுஅழைக் கக்காலன்
அங்கமதி லேயடர்த்தும்,
பெருமைதரும் ஆயிரத் தெட்டென்று பேசும் பெரும்பதிகள்-
-தோறு நின்றும்,
பித்தனென் றுஏசு,வன் தொண்டருக் குஅருளவே
பெரியவய தாய்,நடந்துங்,
கருதுமடி யார்இதய கமலத்தும் என்மனக் கல்லினும்
இருந்த,பாதா!

கமலமிசை தவழ்வளைகள்நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசபரனே. (3)

[சதத்தலைவன்—இராவணன்; உரம்—வலிமை;
உகிர்—நகம்; அரி—திருமால்; கேழல்—பன்றி;
அந்தணச் சிறுவன்-மார்க்கண்டேயன்; வன்றொண்டர்-
சுந்தரர்]

எச்சிலை யுமிழ்ந்துகால் தோல்செருப் பால்விழி யிசைந்திட
உதைத்தவர்க்கும்,
எண்ணிலாக் கல்கொண்டு எறிந்து எறிந்தேதினம் பசியே
நின்ற வர்கவுங்
கைச்சிலையி னால்தழும் புஏறவே தலையிற் கடிந்தே,
கர்த்தவர்க்குங்
கனவெகுளி கொண்டுகர் வேத்திரத் தால்உடல் கன்றிட
அடித்தவர்க்கும்
பட்சமிக வைத்தருள் புரிந்ததே யல்லாது பத்தியுடன்
நித்தநித்தம்
பசிய இலை,மலர்தூவி இன்பணி புரிந்தவர்கள் பால்
விரைந்ருள் கிலாதென்?
கச்சணி தனத்தியெனது அன்னைசிவ காமிஇரு கண்களிக்
கின்றஅழகா
கமலமிசை தவழ்வளைகள்நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசபரனே. (4)

[கண்ணப்பநாயனார், சாக்கியநாயனார், அர்ச்சுனன்,
பாண்டியன் ஆகியோர் இப்பாடலிற் பேசப்
பெறுகின்றார்கள் கரம்—கை, ருபத்திரம்—பிரம்பு]

அல்லென நிறைந்த வென் அஞ்ஞானம் விடியுமா?
வார்அகம் பாவம்,ஈனம்
அகலுமா, துவிதம்அற் றுஒழியுமா, நித்தமும் அடங்காத
மோக மற்பேய்
நில்லாமல் ஓடுமா, ஆனந்த ஆவேச நீர்மையறி வுஎன்னைவிட்டு
நீங்காது நிற்குமா, பெண்ணாசை பிரியுமா, என்றுஎன்று
நெஞ்சில் உன்னி

பொல்லாத பூவுலகில் எண்ணிமனம் உருகியே புண்ணாகி நிற்பதல்லால்
புந்திதெளி வாகியுனது அந்தமது அறிந்திடப் புகலிடம் பிறிதுகாணேன்
கல்லால் இருந்து அடியர் நால்வருக்கு அருள்செய்த கருணை வைத்,துனையாளுவாய்
கமலமிசை தவழ்வளைகள்நிறை பனசையதனில்உறை கடவுள் சோழீசபரனே. (5)

[அந்தம்—திருவடி, கல்லால்—ஆலமரம;
நால்வர்—நான்குமுனிவர்]

கூசாது வாசா லகம்பேசி வேல்தொழில் கொள்ளுமிரு விழிகள் காட்டிக்
கோலமுடன் ஓலமிடு வண்டுஅணிந்து அபிநயக் கோள்தரு கரங்கள் காட்டி
வாசந் தரும்களப மே,பூசியே தன வனப்பினில் சிறிதுகாட்டி
வாரிசமெனப் பொலியும் வதனமுங் குறுநகை வகுப்பென முருந்து காட்டி
நேசம்வைத் தவர்போல வே,தழுவி மோசமே நெஞ்சினிற் கொண்டு வஞ்ச
நீர்மைபுரி மங்கையர்கள் ஆசையால் உருகாது நின்கழலைக் யே,துதிக்க
காசணி புயத்தி,சிவ காமியுறை வாமனே கடையனேற்கு அருள்புரிகுவாய்
கமலமிசை தவழ்வளைகள்நிறை பனசைய தனில் உறை கடவுள் சோழீச பரனே. (6)

[களபம்—சந்தனம்; வாரிசம்-தாமரை; முருந்து-பல்;]

ஆர்மா னிடப்பிறவி வந்தென்ன நானெனும் அகந்தை சற்று ஓயவில்லை
ஆசை, மிடி போகவிலை, கோசமயல் தீரவிலை, ஆணவம் ஒடுங்கவில்லை,
கூர்அயிலின் விழிமாதர் காதல்விட் டுஅகலவிலை கூவாசை தனவாசையுங்

கொஞ்சமெனு மாறவிலே, வஞ்சர் உறவு ஓடவிலக்,
கொக்சைக் குழா நட்பினைப்
பார்அதனி லேசதம் என்றுஎண்ணி உண்மைதெரி பத்திவழி
தனையறிகிலேன்
பதுமா சனன்விதிப் படியும்இது வோ,அலது பண்டுசெய்
திடு,கரு மமோ
கார்உறையு மனமலம் அகற்றிடவே யின்றுனது கருணை
வைத்தருள் புரிகுவாய்
கமலமிசை தவழ்வளைகள் நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசபரனே. (7)

[ஆர்—நிறைந்த; மிடி—வறுமை; கோசம்—வயிறு; கூ—மண்; பதுமாசனன்—பிரமன்; கார்—கரிய; மனமலம்—ஆணவம் முதலிய மும்மலங்கள்]

அரிதிரையி னில்பட்டு அலைந்திடு துரும்பதாய் அல்,பகலு
நித்தநித்தம்
ஆசைமய லாகிவரு பாசம்அத னிற்சிக்கி அரிநிகர
தானமனது
எரிமெழுக து,என உழல்வது அல்லாது சற்சங்கை எள்ளளவு
எனுஞ்செவிக்கு
ஏறவிலே, துற்சங்கை தீரவிலே யே,இதற் கென்செய்கு
வேன்ஐயனே
அருமறைக் குஅரியனே, அன்புவைத்து உன்கருணை
யாகிநிறை கின்றமுகிலால்
ஆலியது உகுத்திடுவ துஒத்தஉன தருளினுல் அடியன்எனை
யாளுதற்குக்
கரியுரி யணிந்து, தலைகொண்டுபலி உற்றநீ காட்சிதர இன்று
வருவாய்
கமலமிசை தவழ்வளை கள்நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசபரனே. (8)

[திரை—கடல்; ஆலி—மழைத்துளி; கரியுரி—யானைத்தோல்; தலை—பிரமனுடையதலை]

அன்னமய கோசம்.ஐம் பூதத்தி ஞலேசெய் துஆடும் புழுக்
கூட்டினுல்
அக,மமதை, பொருமை, வன்மொழி வழங்கிடுதல்,
ஆசை, கொடிதான வெகுளி,
நன்னயமி லாதகொலே, பொய்,களவு, கள்,காம நானெ,னும்
அகந்தை கொண்டு
நாள்தொறும் அலேவதுஎன நீதியோ சோதியே! நாயினுங்
கடையன் உள்ளச்
சின்னமதி யாவையும் அகற்றவிடை மீதுஏறி, சீதமதி
வதனியான
செவ்விமர கதவல்லி, நவ்வியிரு நயனி,சிவ சத்திதிரி,
சூலி,வாலே,
கன்னி,சிவ காமியுடன் வந்தென்எதிர் தோன்றியே கருணே
வைத்தென்னேயாள
கமலமிசை தவழ்வளே கள்நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசபரனே. (9)

[வதனி—முகமுடையவள்; நவ்வி—மான்; நயனி—
கண்களேயுடையவள்; புழுச்கூடு—உடம்பு]

மாருதத் தோடு, அப்பு, அங்கி,ஆ காசமெனு, மண்ணினுல்
ஆனஉருவின்
வந்து, குடியானநின்ற தத்துவக் குழாத்தினது
வகையதனே யாய்ந்து மெய்மைச்
சீரதனே அறியாது நானெனும் அகந்தையாற் சிக்கி
சிறியன்எனே எந்நாளு நின்கருணேயாகிச் சிறந்திடுகின்ற
பெரிய
வாரிதியில் வாய்மடுத்து உண்ணும் படிக்குஉதவி, வஞ்சகத்
தொழில்கள் புரியும்
வன்மனக் கல்லேக் கரைப்பதற்கு இன்று நீவந்தருள்
புரிந்திடுவையே
கார்மருவு மேனிசிவ காமிஉறை வாமனே கருணேப்பிரவாக
நிதியே
கமலமிசை தவழ் வளேகள்நிறை பனசைய தனில்உறை
கடவுள் சோழீசர்பரனே. (10)

[மாருதம்—காற்று, அப்பு—நீர்; அங்கி—நெருப்பு;
வாரிதி—கடல்; கார்—கருமை]

# திருப்பனசைக் கண்ணுடையம்மை மாலே

## காப்பு

*கட்டளைக் கலித்துறை*

பொன்ஆக மம்மறையின் ஒலியார் பனசைப் புரியின்
மின்னுக, மங்குல், தனு மேவிய கண்ணுடை யவள்மேல்
பன்ஆகமம் தருபாமாலே யான்இன்று பாடுதற்குத்
தொன்நா கம்அன்ன முகன்ஐங்கரன் தாள்துணே துணேயே.

[நாகம் — யானே; மின் — மின்னல் போன்ற இடை; மங்குல் — மேகம் போன்ற கூந்தல்; தனு— வில் போன்ற புருவம்; ஆகமம்—சைவ ஆகமம, நூல்]

## நூல்

திருமா துஅணிசெயப் பாமகள் மேவத் தினந்தினமும்
அருமா தவரும் மிகுயோகு செய்திட அம்குணக்கின்
வரும்ஆ தவன் கண்டு பங்கயம் பூப்ப வளர்பனசைப்
பொருமா தர்ஆர்ந்த கண்ணு னந்தி பொற்பதம்
போற்றுவனே (1)

அருங்கா னகத்தில் அரிமீதில் ஊர்ந்துஅன் பதாகஇன்பந்
தருங்கா னம்ஓது வர்உள்ளே யுறைந்தும் தடமதில்சூழ்
மருங்கா னதாலப் பதிநகர் மேவியும் வன்கண்நமன்
வருங்கால் நம்தீவினே தீர்க்குங் கண்ணுனந்தி மால்கழலே.

[அரி — சிங்கம்; கானம் — இசை; தாலப்பதி — பனசைநகர், நாட்டரசன்கோட்டை.] (2)

மணம்காதம் வீசுஅலர்க்காக்கணம் சூழும் பனசைவந்து
வணங்காத வல்நெஞ்சருக் குஅரியாய் உனேவாழ்த்தும்
என்பால்
சுணங்காது அருள்செயத் தோற்றியும் அந்தகன்
தொல்பிணியால்
அணங்காது தீர்த்து என்னே ஆள்வாய் கண்ணுனந்தி
யம்பிகையே. (3)

[கா — சோலே; அந்தகன் — எமன்.]

விணதலந் தோய்ந்துஉம்பர் நாட்டினில் கோடுகள்
மெல்நிழல்செய்
தண்டலைதந்த மதுப்பணை சேர்ந்துசெஞ் சாலிதரக்
கொண்டலை, வானைச், சுரபியை நாணக் கொடுப்பவரும்
மண்டுஅலை சூழும் பனசையில் வாழுங்கண் ஞானந்தியே. (4)

[கொண்டல் — மேகம்; சுரபி — காமதேனு]

காவிக்குலம் கஞ்சமேல் பூத்தது என்னக் கமலமிசை
மேவிக்களி வண்டுஇனந் தேறல் உண்டு ஒலிமிஞ்சவனம்
ஆவிக் கிசைந்ததன் பேட்டினைத்தேடி வந்தங்குஉறையும்
வாவிக் குழாங்கள் நிறைதாலம் வாழுங்கண் ஞானந்தியே. (5)

[காவி — நீலோற்பல மலர்; கஞ்சம் — தாமரை; கமலம் — தாமரை; தேறல் — தேன்; ஆவி—உயிர் தாலம் — பனசைநகர்]

நாலாறு கலைதெரி நாவா ணரும்அற நன்னெறிசேர்
மேலாம் அறிவினரும் துறவோரும், வில்வேள்வடிவக்
கோலா கலக்குமர ரும்திருமின் என்கோதையரும்,
மாலாய உறைந்திடும் தென்தாலம் வாழுங்கண்
ஞானந்தியே. (6)

[நாலாறுகலை — அறுபத்து நான்குகலை; நாவாணர்— புலவர்; வில்வேள் — மன்மதன்; தென்தாலம் — தென்பனசை ]

கூஆ லயங்களிற் சென்றே அலைந்துகை கூப்பிநின்று
தேவா எனக்குஅருள் செய்என வேண்டிட ஓர்செயலும்
மேவாமல் உன்னிடம் வந்திடுவோர்வினை தீர்த்திடுவாய்
பூவா சனைமன் பனசைப் புரியில்கண் ஞானந்தியே. (7)

வன்னியும் பூவையும் வேதஆ கமங்களை வாய்திறந்து
தன்இயல் பாம்இசை குன்றாது உரைக்கத் தனிக்கமுகின்
நல்நயம் கன்னல் குலங்காட்ட, நத்துமுத் தூஈன்றிடவும்
மன்னிய தாலப் பதிவா ழுகின்றகண் ணைந்தியே. (8)

[வன்னி — கிளி; பூவை — நாகணவாய்ப்புள்; கமுகு — பாக்குமரம்; கன்னல் — கரும்பு; நத்து — சங்கு]

கஞ்சா சனத்தன் அம்கா வாசனத்தன், கடவுளர்செம்
பஞ்சா யநின்திருச் சேவடிக் கன்பு பதித்திடவே
அஞ்சா யுதற்கு இளையாய், அவர்வேண்டும் வரம்அளிப்பாய்
மஞ்சுஆரு சோலை வளஞ்சார் பனைசைக்கண் ணைந்தியே. (9)

[கஞ்சாசனத்தன்— தாமரையில் வாழும் நான்முகன்; காவாசனத்தன் — கற்பக நிழலில் உள்ள இந்திரன் செம்பஞ்சு — செம்பஞ்சுக்குழம்பு போன்ற; அஞ்சாயுதன்—வில், வேல், முதலிய ஐந்து ஆயுதங்களையுடைய திருமால்; மஞ்சு — மேகம்]

இல்லா வறுமையி னாலே உழன்றும், இதயம் வெம்பிச்
சொல்ஆ டலின்றி வருவோர்க்கு உதவும் சுகுணமுள்ள
நல்லார் களும்,நடுக் குன்றாது நீதியை நாடுகின்ற
பல்லோர் எக்காலமும் வாழும் பனைசைக்கண் ணைந்தியே.

[நடு — நடுநிலைமை] (10)

இல்லாக் கயவர், கரவோர், இழிகுலத் தின்கசடர்,
செல்லா நெறியிற் புகுவோர்கள், நட்பினிற் சென்றுஅலைந்து
நல்லோர் இணக்கம் அறியாது எனக்கருள் நாடிடுவாய்
அல்ஆர் குழல்திரு வே,தாலம் வாழுங்கண் ணைந்தியே. (11)

[கரவோர் — மறைத்துப் பேசுவோர்; அல் — இருள்; குழல் — கூந்தல்; தாலம்— பனைசைநகர்;]

தேனே இனிய அமுதே கனல்தரும் தெள்ரசமே,
மானே,மரகத வாண்மயிலே! வனமாம் அனமே,
மேல்நாள் வினையினில் தானே யுழலும்என் மேல்அருள்செய்
வான்நா டார்போற்றப் பனசையில் வாழுங்கண் ணனந்தியே.
[கனல்—கரும்பு; அனமே—அன்னமும்] (12)

கள்ளா ருங்கூந்தல் அணங்கே உனதுகஞ் சத்தடம்உட்
கொள்ளா து,அறநெறி செல்லாது, கோலநின் நாமமென்றும்
விள்ளா துஉழலும் எனக்கு அருள்செய்திடவே விமலை
வள்ளாயுதவு பனசையில் வாழுங் கண்ணனந்தியே.
[கள்ளாரும்—தேன்சுரக்கும் பூஅணிந்த;
கஞ்சம்—தாமரை] (13)

பூசனை செய்,து,உனைப் போற்றிப் பணிந்து,நின் பொன் அடிக்கே
வாசனை ஆரும் மலர்தூவி, யேத்தும்வழி அறியேன்
நேசனைப் போல்புவி மீதே நடித்து நிதம்அலையும்
மாசனை ஆன வருவாய் பனசைக்கண் ணனந்தியே,
[மாசன்—குற்றமுள்ளோன்] (14)

மெய்காட்டி மேகநிறக் குழல்காட்டி மென்வண் டுஅலையுங்
கைகாட்டிக், கஞ்சமுகை முலைகாட்டிக், கலைமதியி
னைக்காட்டி யமுகமுங் காட்டும்மாதர்கள் ஆசைஎன்பால்
மைகாட் டுதல்தவிர்த் தாள்தாலம் வாழுங்கண் ணனந்தியே.
[குழல்—கூந்தல்; கஞ்சம்—தாமரை;] (15)

செந்தா மரைநிகர் நின்பாதம் போதினைச் சிந்தைசெய்ய
வந்தார் மிடிப்பிணி தீர்த்தருள் சூலி! வராகிநடு
தந்தார் மலர்க்குழல் தேவி கங்காளிநற் சத்தி,கன்னி
மந்தா கினி,எனத் தென்தா லம்வாழுங்கண் ணனந்தியே.
[மிடி—வறுமை; நடு—தன்உடம்பில் பாதி] (16)

ஓயாப் பவப்பிணி யாலேபுவி யில்உழன் றுதினம்
தாயார் வயிற்றில் பிறந்தே அலேந்ததமி யன்எனே
மாயா உலகம்அதில் வருந்தா துநன் மார்க்கமதை
வாயால் திறந்து அருள்செய்வாய் பனசைக்கண் ணனந்தியே.
[பவம்—பிறப்பு] (17)

வயமா மகிடன்உயிர் போக்கி உம்பர்கள், வாசவன்,பொன்
திருமால் அயன்,முத லோர்துயர் தீர்த்திடும் தேவிஎன்பால்
தருமால் இருளேத் துறந்திடச் சிங்கந்தனில் வருவாய்
அருமா தவப்பொரு ளே,தால மேவுங்கண் ணனந்தியே.
[மாமகிடன்—மகிஷாசுரன்; உம்பர்—தேவர்;
வாசவன்—இந்திரன்; அயன்—நான்முகன்;
மால்—மயக்கம்] (18)

வேலேக் கயலேப் பொருவுகண் ணர்மருட்டும் வேதனேயால்
மாலேக் கொடும்புவி மீதே உழல்வல் வினேயன் என்பால்
சோலேக் கிளியெனநீ வாய்திறந் துஅஞ்சல் என்றுசொல்வாய்
வாலேச் சிறுபெண் என்றே தாலம்வாழுங் கண்ணனந்தியே.
[கயல்—கயல்மீன்; பொருவு—ஒக்கும்;
புவி—உலகம்] (19)

வந்துஅந் தருமலர்ச் சேவடி போற்றி வருந்திநிற்க
அந்தந் தரும்இரு பார்வையும் ஈந்துஅன் றுஅருள்சுரந்து
கந்தந் தருக்குங் குழல்அணங் கே,கடை யேற்குவரும்
அந்தந் தருமன் அணுகாது அருளுங்கண் ணனந்தியே.
[அந்தம்—அழகு; கந்தம்—மணம்; அந்தந்தருமன்—
கடைசி காலத்தில் எமன்] (20)

பூத்தா வுஅடியர்தனக் குஇளேயாய் உன்புகழ்படிக்க
தா,தா வடிதமிழ்ச் சொல்வரம் தா,உனே நாடிஅன்பாய்
ஏத்தா அடியர்கட் குஎட்டாய், என்பால்இரங் காத்துஎன்ன
கூத்தா, வடிதிரி சூலம்கைக் கொண்டகண் ணனந்தியே!
[பூத்தாவு—பூமியைத்தாவும்; அடியர்—அடியினேக்
கொண்ட திருமால் ] (21)

கனகக் கல்மீ தினில்கோ டுஆனை மறைதனைக் கண்டெழுதும்
அனகக் கனமெய் யனைப்,பா ணியானை, அருள்முதல்வி !
பனகக் கலன்அணி பைங்கிளி யே!தினம் பாவிஎன்பால்
மனகக் கசடுஅ கல்விப்பாய் கண்ணு னந்திமாமயிலே. (22)

[கனகக்கல்—மேருமலை. தோடுஆனை—பிள்ளையார்;
மறை—பாரதம்; பனகம்—பாம்பு ]

திருவும் கலையும் தமக்கே பதியிது எனத்தெளிந்து
மருவும், குயிலும், அனமும், கிளியும், மயிலும்அயில்
பொருவும் கணுர்க்கு உடைந்து ஓடும்வளங்
கள்பொருந்தி, நிதம்
வருபுங்க வர்புரை சூழ்தா லம்வாழுங் கண்ணுனந்தியே. (23)

(கலை—கலைமகள்; அயல்—வேல்; புங்கவர்—
உயர்ந்தோர்; தாலம்—பனசைநகர்;)

மாலைக் கரும்பு மலர்த்துஎழில் காட்டும் பனசைவந்து
வேலை, கருங்குவளை யைப்பழித் தவிழி! எனத்தொன்
நூலைக் கருதிஅடி தொழுவார்க் குறுவல ஒண்ணு
ஆலைக் கரும்பு ரசம்எனத் தோன்றும்கண் ணுனந்தியே. (24)

[மாலை—வரிசை]

கத்துங் கருங்கடல் நேரா கனம்புய முங்கனகம்
பத்துங் கருக்கல் பெறப்பணி த்தான்உடல் பாதியினில்
எத்,துங் கருந்தொழ வேய்ந்தும் பனசை யிருந்தவுனை
நத்துங் கருத்து எனக் குஈவாய் கண்ணு னந்.திநாயகியே.
(25)

[பணித்தான்—சிவபெருமான்; துங்கர்—தூயவர்]

அஞ்சக் கரத்துஅரன் அங்கத்தின் மேவியும் ஆனைமுகப்.
பஞ்சக் கரத்தனை ஆறுஆனனத் தனையும் பயின்றுஞ்
செஞ்சக் கரத்தரி பின்னையும் ஆகித் தினம்பணிவோர்
வஞ்சக் கரவினை மாற்றுங் கண்ணு னந்திமாலினியே. (26)

[அஞ்சக்கரத்து—பஞ்சாட்சரம்; ஆனனம்—முகம்;
செஞ்சக்கரத்தரி—சக்கரத்தையுடையதிருமால்;
பின்னை—தங்கை]

வஞ்சந் தவவடி வாகிமுன் ஏய்வனம் வந்துமிகை
மிஞ்சத் தவறும் மிதிலேசன் மாமகள் பால்விளைத்த
கொஞ்சத் தவன்உயிர் கொன்றோர்க்கு இளையகுணக்கடல்என்
நெஞ்சத் துஅவமத் விர்த்து ஆள்வை, நல் நீலி கண்
ணனந்தியே (27)

[தவவடிவு—துறவி; தவறும்—தவற்றினை; மிதிலேசன் மாமகள்—சீதை; கொஞ்சத்தவன்—இராவணன்]

சோதித்து அனந்தமுறை பார்த்து, அடியவர் தூய்மைகண்டு,
நீதித் தனந்தனையப பேறளித்து நெருங்கிவரும்
மேதித் தன்அந்தகன் வல்வினை தீர்க்கு விமலி அருள்
ஆதித் தன்அந்த ஒளியாருஞ் சூலி கண்ணனந்தியே.

[தனம்தனையட்பெறி—செல்வம்; மக்கட்பேறு; மேதித்தன்—எருமைக் கடவுடையோன்; அந்தகன்—எமன்] (28)

அஞ்சங் கரிநடை மின்னார்கள் ஆர்அரவு அல்குல், இன்ப
வஞ்சம் கரியென நாடார்கள் வேண்டு வரம்அளிக்கும்
கஞ்சம் கரியது எனவே பழித்த கழல்உடைய
அம்சங் கரியெனை ஆள்தா லம்மேவு கண்ணனந்தியே. (29)

[மின்னார்கள்—பெண்கள்; அரவு—பாமபு; அஞ்சம்—ஹமசம (அன்னம்) கரிசான்று; கரி—கரிபோன்றுபயன் அற்றது; கஞ்சம்—செந்தாமரை; கரி—கரிபோற் கதுப்பு; கழல்—திருவடி]

பொருகே தனத்துதொழில் வேதாள மேவிய பொற்கொடி என்
அருகே தனத்தை யலார்புரி தீவினை அந்தகனல்
வருகே தனந்த வரநீ யளித்து வழுவகன்ற
உருகே தனமெனக் கீவாய் கண்ண னந்தியுத்தமியே.

கேதனம்—கொடி; தனத்தையலார்—தனத்தையுடைய பெண்கள்; கேதனம்—துன்பம்] (30)

பூவைக் கரும்புவில் சேர்த்து எய்யும்வேளைப் பொரிவிழியால்
மாவை, துகளை நிகராகவே செய்தவள்ளல் மெய்யின்
சேவைக்கு இசைந்த அமுதே, அடிமைசொல் செந்தமிழாம்
பாவைப் பரிந்துகைக் கொள்வாய் பனசைக் கண் ஞானந்தியே
(31)

[பூ—மலரம்புகள்; வேள்—மன்மதன்; வள்ளல்—சிவன்
பாவை – பாட்டை]

---

# திருப்பனசைக்
# கண்ணுடையம்மை பதிகம்

காப்பு வெண்பா

பண்ணுடையாழ் கொண்டுதுதி பண்ணுமடி யார்க்கருளும்
கண்ணுடையாள் மீதுபதி கம்புகல—விண்நிறைக்கா,
மாவா ரிதி,அருந்தி வண்கரக நீர்கவிழ்த்த
பூவா ரிசத்தடக் காப்பு.

[அருந்தி—கடலைக்குடித்த அகத்தியர்]

ஆசிரிய விருத்தம்

பூரணி, பராசத்தி, திரிசூலி, கௌமாரி, புவனம்எங்
கணுநிறைந்த
புங்கநவ கோணி,திரி நயனி,யரி வாகனி, புனிதசங்கரி,
குமாரி,
நாரணி மதங்கிபை ரவி,நீலி, யபிராமி, நான்மறைத்
தலைவிதேவி,
நம்புமடியார்களுக்கு உதவிய சடாட்சரி, நற்கருணை
வாரி,வாலை
தார்அணிந் திடுகன்னி, சுந்தரி, சவுந்தரி, தக்கபஞ்
சாக்கரத்தி,
தற்பரா னந்தி,உமை, கங்காளி, வேதாளி, தாண்டவம்
அதுஆடுசெல்வி,
காரணி, அனந்தகுண கல்யாணி, சாமுண்டி, கனமகிட
அசுரவைரி,
கஞ்சா சனன்,குலிசன் அஞ்சாயுதற்குஅரிய கமலைபன
சைக்கணுமையே,

[அரி—சிங்கம்; வைரி—பகை; கஞ்சாசனன்—தாமரை பாலிருக்கும் நான்முகன்; குலிசன்—இந்திரன்; அஞ்சாயுதன்—ஐம்படையுடையதிருமால்] (1)

வான்தடவி நிற்கின்ற சோலைகளும், அத்தருவின் வழிவந்த மதுவாரியால்

வண்மைபெரு தண்பணையி னில்சென்று செஞ்சாலி மருவுமுப் போகம் வளரும்

பால்நிற நிறைந்தமதி மண்டலம் அளாவவரு பரிவான மாடமனையும்

பைங்கிளி நிகர்த்த மொழி மங்கையர் வனப்பினைப் பகரஅரி தாயிருக்கும்

மால்மகனை ஒத்தவடி வாகின்ற மானவர்கள் வார்த்தைபிச காதநலமும்

மதித்து அளவு உரைத்திட அடங்காத கனகத்தின் மகிமைநல் அறிவின் வாய்ப்பும்

கானமதில் நாரதன் எனக்கருது பெருமையுங் காட்டுமிப் பதியில் என்றுங்

கஞ்சாசனன் குலிசன் அஞ்சாயுதற்குஅரிய கமலைபன சைக்கணுமையே.

[பனை—வயல்; மால்மகன்—திருமால்மகனுன மன்மதன்;] (2)

கொண்டல்தனை ஒத்தகுழல், கொண்டையை நிகர்த்தவிழி, குமிழதனை யனையநாசி

கோகனக மானமுகம், வாகுமிடறுஅம்கமுகு, கோலமிகு காதுவள்ளை,

கண்டுமொழி யாம்பவள மாகும்இதழ், யாவரும் கருதுஅரிய முத்துமூரல்,

களபம்அணி கொங்கை இருகும்பம், எனலாம் உபய கைகள்நிறை செங்காந்தளாம்,

பண்டுஅரி துயின்றவட ஆல்இலைய தாம்வயிறு, பசியகொடி யாகும்இடையே,

பணியெனவும் அல்குலாம், வாழைபிரு தொடைகளாம் பகர்அலவனும் முழந்தாள்

கண்டவர் மயங்கு எகின நடைகாட்டு மாதர்தங் காதல்தீர்த்து எனைஆளுவாய்

கஞ்சாசனன் குலிசன் அஞ்சாயுதற்கு அரிய கமலேபன
சைக்கணுமையே

[கொண்டல்—மேகம்; குழல்—கூந்தல்;
குமிழ்—குமிழப்பூ; கோகனகம்—தாமரை;
மிடறு—கழுத்து; கண்டு—கற்கண்டு; மூரல்—பல்;
கணம்—சந்தனம்; அரி—திருமால்; பனி—பாம்புப்படம்
அலவன்—நண்டு; எகினம்—அன்னம்] (3)

மிடியர்க ள்தமைச்செல்வ ராக்குவாய், மூடர்களே மெய்யறிவ
ராக்குவிப்பாய்
மெத்தப் பயந்துபலம் அற்றவரை மிகுசத்தி மானஎன
விளக்கி வைப்பாய்,
மடிபரை முயற்சியில் வலுத்தவர்கள் ஆக்குவாய். மானவர்கள்
ஆணவமிலா மாந்தரிடம் மாருத காமா விகாரத்தை
வந்துகுடி கொள்ள வைப்பாய்
படிமிசையின், நின்னடி வணங்கும் அடியார்கள்பெண்பற்றில்
அணுகாமல் வைப்பாய்,
பாவிநல் வழிசேர வைக்குநின் னருளினேப் பகர்ந்திட
எவர்க்கும் எளிதோ
கடிமலர் செறிந்தமா மாலேயணி தேவியே. கருணேவைத்து
எனே ஆளுவாய்,
கஞ்சாசனன் குலிசன் அஞ்சாயுதற்கு அரிய கமலேபன
சைக்கணுமையே.
[மிடியர்—வறியவர்] (4)

அண்டர்கட் குஅரிதான மானிடப் பிறவிதனில் யான்அடிமை
வந்து உதித்தும்
அத்துவித சாத்திரத்து உண்மையை அறிந்து
நின்அடியிணேக்கு ஆளாகிடுந்
தொண்டர்பணி செய்யவறி யாமலே வாரித்துரும்பாக
நித்தநித்தம்
தொல்உலகில் வாடுவது மதியீனமோ, மெய்மை
தோயாமலோ, அல்லது

முண்டக மலர்ப்போதன் அன்றுஎழுதி வைத்ததோ,முன்செய்த
தீவினையதோ

மூடன்அறி யேன்இதைத் தேறுதற்கு இன்றுநீ
முழுமதியெனத் தோற்றுவாய்

கண்டவர்க ள்தம்சிரம் வீட்டியவராகியே, கருணைவைத்து
எனைஆளுவாய்

கஞ்சாசனன் குலிசன் அஞ்சாயுதற்குஅரிய கமலைபன
சைக்கணுமையே (5)

[முண்டகமலர்ப்போதன்—பிரமன்; கண்டவர்கள்—
அசுரர்கள்; வாரி—கடலிலிட்ட; முண்டகம்—தாமரை;
போதன்—நான்முகன்; கண்டவர்கள்—கண்டர்கள்;
அசுரர்கள்;]

பூதலந் தனில்ஆசை கொண்டுநின் றுஉழல்வனோ, பொற்பணி
தனக்கு உழல்வனோ

போருமையாகின்ற பேய்பிடித்துழல்வனோ,
பொறையரியன் என்றுஉழல்வனோ,

மாதர்அ தரத்துஅமுதம் வேண்டிநின் றுஉழல்வனோ,
மலமாயை யால்உழல்வனோ

மரிகால ம்,எதிர்கால, நிகழ்காலமாகின்ற. வகைபுரியன்
எனறுஉழல்வனோ

வேதன்விதி யால்வந்த தந்தைதாய் மகமனே, கள்மேற்காதல்
கொண்டுஉழல்வனோ

மெய்யெலாம் வாயாய்ப் பிதற்றிஅலை கின்றதுஇது
வீண்கால ம்என்றுஉழல்வனோ,

காதுவே ல்எனநின்ற கண்ணுடைய சூலியே, கருணைவைத்
துஉதவிபுரிவாய்

கஞ்சாச னன்குலிசன் அஞ்சாயுதற்குஅரிய கமலைபன
சைக்கணுமையே. (6)

[பொற்பணி—பொன்னுபரணங்கள்; அதரம்—இதழ்
மரிகாலம்—இறந்தகாலம்; வேதன்—பிரம்மா; மகமனே
—மக்கள்; வீடு; காது—கதுவுகின்ற

வற்றல்மரமாகிப் புலர்ந்துஅடிமை நிற்கின்றவன்மைநீபார்க்க
விலேயோ
வஞ்சர்உற வால்வருஞ் சஞ்சலத் தால்மனம் வருந்துவது
பார்க்கவிலேயோ
குற்றமிகு வஞ்சியர்கள் குற்றேவலாய் நின்ற கொடுமைநீ
பார்க்கவிலேயோ
கூசாதஆசா பாசாசு எனுங் காசுஆசை கொண்டுஅலேதல்
பார்க்கவிலேயோ
நற்றவ முயன்றுபுலன் வென்றவர்கள் இட்டபணி நாடாமை
பார்க்கவிலேயோ
நான்எனும் அகந்தையால் வீணுய் நிற்கின்ற நலிவுநீ
பார்க்கவிலேயோ
கற்றவர் துதித்திடும் வாலேஉனே நம்பினேன் கருணேபுரி
யிதுசமயமே
கஞ்சாச னன்குலிசன் அஞ்சா யுதற்குஅரிய கமலேபன
சைக்கணுமையே. (7)

[வஞ்சியர்—பெண்கள்]

தாயிலா மைந்தனேப் போலும்முறை இடுகின்ற தன்மைநீ
கேட்கவிலேயோ
தமியன்நா அலறுவது கேட்டுவந்து உன்னடியர்
சாற்றவு நினேக்கவிலேயோ
பாய்மரக் கலம்மீது வேலேஉழல்காக மாய்ப் படுதுயரம் அறிய
விலேயோ
பஞ்சமா பாதக ருடன்கூடி யான்படும் பாடுஒருவர்
சொல்லவிலேயோ
நாய்நரிகள் நமதென்று நாடும்உடல் நான்என்று நாடுவது
பார்க்க விலேயோ
நம்பும்அடி யேன்தனே காப்பதுஉன் கடமைமறை
நாடுதற்கு அரியபொருளே
காய்ந்துசின மானவேல் கைகொண்ட அசுரனேக் காலன்
உலகு, அடையவைத்தாய்
கஞ்சா சனன்குலிசன் அஞ்சாயுதற்குஅரிய கமலேபன
சைக்கணுமையே. (8)

[வேலே—கடல்; காகம்—கரக்கை]

இல்லாமை யென்னும் பெரும்பிணிக் குஅலேவனே இரைதேட
நின்றுஅலேவனே
ஈசன்அடி யார்கள்அடி நித்தமும் வணங்கா திருந்திடு
குறைக்கு அலேவனே
பொல்லாத மாந்தர்உற வானதற்கு அலேவனே புந்திஇலன்
என்றுஅலேவனே
புனிதநிறை வாவிதனில் மூழ்காமலே நின்ற புன்மையை
நினேந்துஅலேவனே
செல்லாத வழிதனில் சென்றுநின் றுஅலேவனே செகஆசை
யால் அலேவனே
சிற்றறிவ ராகின்ற பூரியர் இடஞ்சென்று சேவித்துநின்று
அலேவனே
கல்லாத மாந்தர்நட் பால்அலேந் தேதுயர்க் கடலின் மூழ்காது
அருள்வாய்
கஞ்சாசனன் குலிசன் அஞ்சாயுதற்கு அரிய கமலேபன
சைக்கணுமையே. (9)

[பூரியர்—கீழ்மக்கள்]

அற்பமா கியவாவி யுடைபட்டு வாரியினடைந்திடின் அதைப்
பொருதோ
அத்தகைமை யொத்துஉன்அருள் ஆனந்தசாகரத்து
யான்வந்து அடைந்திருந்தால்
பற்பலர்கள் நிந்தையிதுவென்று சொல்வார்களோ, பங்கம்
உனே வந்தடையுமோ,
பத்திவழி அறியாத வஞ்சன்இவன் என்றுஉனது
பத்தர்கள் பகர்ந்திடுவரோ,
நற்பருவம் இல்லாத துஷ்டன்என் பார்களோ, ஞாயமிலேஇது
என்பரோ,
நஞ்சுஎனவே மேலோர் இகழ்ந்திட்ட கன்னியரை
நாடினவன் இவன்என்பரோ,
கற்பிளவெனப் பொற்பிலா மூடனும்எனேக் காத்திடக்
கருணேபுரிவாய்
கஞ்சா சனன்குலிசன் அஞ்சா யுதற்கரிய கமலேபன
சைக்கணுமையே. (10)

[வாவி—குளம்; வாரி—கடல்; சாகரம்—கடல்;
கற்பிளவு—கல்லிலேற்பட்ட; பிளவு]

உ

# திருப்பனசைக் கண்ணுடையம்மை கும்மி

காப்பு—வெண்பா

நாட்டரசன் கோட்டைக்கண்ணுத்தாள் மதவாவுண்
நாட்டரசன் கோட்டைக்கண் ணுத்தாண்மேல்—ஈட்டுகும்மி
சொல்லத் துதிக்கைஅன்பர் தூயமனத் தாளனதுஉள்
புல்லத் துதிக்கையன் காப்பு.

கும்மி

செந்திரு நாமகள் மேவும் பனசையில்
தேவியெனுங்கண் ணுடையவள் மேல்
சிந்தை மகிழ்தமி ழால்குமமியான் சொலத்
தேசி விநாயகன் காப்பாமே. (1)

சீலமிகும்தாலக் கண்ணுடையாள் மிசைச்
செந்தமிழால்கும்மிப் பாட்டுரைக்கக்
கோலமயின்மிசை ஏறிவருங்குகன்
கோகனகத்திருத் தாள்துணையே. (2)
[கோகனகம்—பொன்]

பூசுரர் மாதவர் போற்றும் பனசைநற்
புங்கவியாங் கண்ணுடையவள் மேல்
தேசுலவுங்கும்மி யான்புகவருள்
தேவன் சோமீசனுங் காப்பாமே. (3)
[பூசுரர்—மறையவர்]

## முடுகு

ஆசைவானவர் பூசையேபுரி தேசிதாசர்கள் நேசியாய்வளர்
அம்பிகைகண் ணுமைமேல் கும்மிக்கு
மாசிலாமயில் பேசுநற்குயில் ஓசையைத்தருவாசகத்
திருவாலே சிவகாமி காப்பாமே. (4)

அந்தகர் கண்துயர் தீர்த்திடுங் கண்ணுடை
யாள்மிசை யான்கும்மிப் பாட்டுஉரைக்க
நம்தன் நல் செந்திரு மார்புஉறையும் வேங்கடா
சலநாதனுங் காப்பாமே. (5)

நாவலர் வேண்டிய நல்வரம் ஈந்திடு
நாயகி கண்ணுடையாள் கும்மிக்கு
மாவலன் எங்கள் பெரிய கருப்பு அண்ணல்
வானவன்தாள்மலர் காப்பாமே. (6)

பொல்லா மிடிதனைத் தீர்த்து அடியார்க்கு அருள்
பூரணிகண் ணுடையாள் கும்மிக்கு
மாவலன் எங்கள் பெரிய கருப்பு அண்ணல்
வானவன்தாள்மலர் காப்பாமே. (7)

அண்டர் முனிவர்கள் போற்றுங்கண்ணம்பிகை
யாம்அன்னை மேல்கும்மிப் பாட்டுரைக்க
வண்டுஉறைமாலே யணிகுருநாதன்அம்
மாமலர்த் தாளிணை காப்பாமே. (8)

பொங்குந்திருநாளில் அவித்த நென்முளை
பூர்தல் செய்கண்ணுடையாள் கும்மிக்குச்
செங்கமலத்தான் முனியாண்டி காளி
தேவிஇவர்கள் பதந்துணையே. (9)
[பூர்தல்—தோன்றுதல்]

பால்அடு பாகுஇணை யாம்மொழிக் கண்ணுடைப்
பைங்கிளிமேற் கும்மிப் பாட்டுரைக்க
ஆலடியான்என வாழுங் கருப்பையன்
அம்பொன் கழலிணை காப்பாமே. (10)

முடுகு

நாடும்புகழ் தேடுங்கவி பாடுந்தமிழ் கூடுங்குண
நாவலர் முன்எழி லாம்மயில்தான்
ஆடும்படி சாடுந்திற லோடுந்தினம் ஓடுஞ்சிறி
துஆகிய வான் கோழி போல் அடியேன். (11)

பத்தர்க்குஅருள் புரி பைங்கிளியாள் கண்டு
பாகுகனிநிக ராம் மொழியாள்
சத்தி கண்ணம்மை கும்மி கூறப்பன
சைப்பதி தன்னி லதிதீர. (12)

நாராயணன் வணி கன்சேயன்நிதம்
நற்றமிழால்கவி சொல்லுவாயன்
நேருங் கருப்ப வணிகன் உரைக்கும்இச்
செந்தமிழ்க்குத் துணை நாமகளாம். (13)
[நாமகள்—கலைமகள்]

நாரணிகண்ணுமை கோலமும்தால
நன்னகர் நாட்டு அனுகூலமுந்
தாரணியில்தினம் படிக்கவுமிகு
சந்தோஷமாய்க் கும்மியடிக்கவும். (14)
[தாலநன்னகர்—தென்பனசை நாட்டரசன்கோட்டை]

அஞ்சுகம்போல்உரை நாகவல்லிமட
அன்னம்எனு நடைத் தோகைவல்லி
கஞ்சமுகமலர்க் காமாட்சிமுகில்
காட்டும்அளக விசாலாட்சி. (15)
[அஞ்சுகம்—கிளி; கஞ்சம்-தாமரை; அளகம்-கூந்தல்]

முடுகு

காவில்குயில் கூவற்குஇணை பாவைபுக லாவற்
பெறு கந்தம நிறைந்திடு நாகரத்தினம்
வாவிற்கயலே ஒபபெனபூவிற் புகழேபெற்றிட
வாய்த்த விழியின் மாணிக்கரத்னம். (16)
[கா—சோலை; கந்தம்—மணம்; வாவில்—தாவுதல்]

அன்னமுத்தேஅடி சொர்ணமுத்தே வயிறு
ஆலிலை போன்ற மருதமுத்தே
மின்னுந் துடியிடை ஆராயி கையை
வீசிநடந்திடு வீராயி. (17)

தந்தையனைதவப் பெண்ணுகிப்புவி
தன்னிலுதித்திடுங் கண்ணுயி
சிந்தையின்மிக்க வுரமாகித்திட
மாய்மொழி செப்பும் பரமாயி. (18)

காதலர்மேன்மிகு மால்ஆகிக்கரங்
காட்டி அழைத்திடும் வேலாயி
சூதுநிகர்தன ராக்காயி,களி
தோன்று மனதுஉள மூக்காயி. (19)
[சூது—மாம்பிஞ்சு (சூதாடும்காய்.]

மக்கள்வளர்க்கும் விருப்பாகிமனை
வாழ்க்கைபுரியுங் கருப்பாயி
துக்கமிலாமனத்தே ஞச்சி சுளி
தோற்றும் மினல்இடை மீனுட்சி. (20)

முடுகு

கண்டத்தொனி கண்டுக்குஇணை கொண்டப்புறை
கொண்டல்குழல் காலன்எனும்விழிக் காமவல்லி
விண்டத்தனை கொண்டற்கடி யென்றர்ச்சனை
யொன்றப்புரி மின்னல்எனுநடுச் சோமவல்லி. (21)
[கொண்டல்—மேகம்; நடு—இடை]

எல்லோருமாய் வந்து கூடுங்கடி சுகம்
ஈயுந்ற் சேங்கைநீ ராடுங் கடி
நல்லகொச்சி மஞ்சள் பூசுங்கடி நய
மாம்பத்டு௨டுத்தியே பேசுங்கடி. (22)

கொண்டையிற் பூவினைச் சூட்டுங்கடி, தனக்
குன்றில் ரவிக்கையை மாட்டுங்கடி
தண்டையிட்டுக்காலில் மிஞ்சியிட்டு, முத்துச்
சரத்தைமார்பினில் தொங்கவிட்டு. (23)

பாடகமிட்டு வண்டிட்டுக் கணையாழி
பாங்குடன்இட்டுப் பதக்கனிட்டு
ஆடகமேலிடு கொப்பிட்டுத் தண்டொட்டி
யணிந்து கஸ்தூரிப் பொட்டுமிட்டு. (24)
[ஆடகம்—பொன்]

முடுகு

பூசித்திடு தாசர்க்குளழில் நேசத்தொடு ஓ
சைக்கடல் போல்அருள் செய்திடு பூரணியாள்
மாசற்றிடு தேசத்தியல் வாசத்தரு வீசத்தரு
வாய்த்தவளம்பல கேளுங்கடி. (25)
[முடுகு—விரைந்து]

காவின்முகிற்குலம் மேவிடுமாம்சிகி
கண்டுகளிப்புடன் தாவிடுமாம்
பூவிலிருந்துதேன் பொங்குமேஅந்த
பூப்பணைச்சாலி யில்தங்குமே. (26)

கோகிலங்கள் சுதி கூடிடுமாம் மயில்
கும்பு கும்பாய்நட மாடிடுமாம்
பாகுஇயலாய்க்கிளி பேசுமே, மதிப்
பாங்கின் மும்மாரிகள் வீசுமே. (27)

கன்னல் கமுகெனத் தோன்றுமே, கயல்
கமுகின் பாளையைக் கீன்றுமே,
மின்னும் மழையுட னேஇறங்கும் பணி
மேவிக் கருடன்மீ தேயுறங்கும். (28)

ஏர்உழும் மள்ளர்கள் தன்னொலியும் வயல்
ஏய்ந்து நடும்மட வார்ஒலியுங்
கூறுகட லொலி மன்னவே அண்ட
கோளம் எங்குந்திடுக் கென்னவே. (29)

## முடுகு

பருதிக்கதிர் விரிதல்தர நிருதத்தனு இருளற்று
இருபங்கயம் பூத்துச் சிறந்திடும்ஓர்
சுருதிச்சமர் பொருதர்க்குஎதிர் வருமக்ரம முறுமுக்ரம
சூர்தடிந்தாள்ஊர் வளமுரைப்பாம். (30)

வானுலவுங் கொர்டித் தூபிகளும் அதில்
வாய்த்திடு நல்லநீ ராவிகளும்
மீனெனவே மிளிர் கண்ணார்களுயர்
வீட்டினில் வாழ்ந்திடும் பெண்ணார்கள். (31)

இந்துசனற்சம யம்பார்ப்பானெனி
யென்று வுமப் படியே காப்பான்
சந்திரன் சாளரங் காட்டுவதும் பெண்கள்
தங்கள் கண்ணாடியாய் நாட்டுவதும். (32)

ஆடவர்பாற்பெண் மகிழ்வதுவுமற்றோர்
ஆண்மகனைக்கண் டிகழ்வதுவும்
ஏடவிழ் பூமலர் சூடுவது மிசை
யேய்மடவார்பதம் பாடுவதும். (33)

மாரனெனவடி வேய்ந்தவருமலர்
மாமகள் போலெழில் தோய்ந்தவரும்
வாரணியுந்தனங் காட்டுவதுமண
வாளருக்கு மயல் பூட்டுவதும். (34)

முடுகு

மேதிக்கழல் மோதித்தனி சோதித்திரள்வீதிக்
கிடு மென்பணிநான்கு மறுகினுமே
கோதிப்புகை சாதித்திடு வோதிக்கன மீதிற்களி
கொண்டிடு வண்டுகள் பாடிடுமாம். (35)

மங்கையராடி வருநீரின்மிக
வாய்த்தகலவை வெறிமீறி
பொங்கிவரும்புனல் ஆருகவயற்
போய்ப்புகுமே செந்நெல் நேராக. (36)

ஈசனடியைப் பணிந்திடுவார் சேடன்
என்னவேகல்வி துணிந்திடுவார்
வாசவன் போற்சுகம் பெற்றவர் பொருள்
வாய்ப்பில்குபே ரனையொத்தவர் (37)

வாழைமடல்களுக் குட்டடையாஞ் சந்தை
வகுப்பிலே தின முங்கடையாம்
ஏழைகளுக்கமு தம்படையே யென்பார்
ஏற்ற நிலத்திற் பசுக்கிடையே. (38)

ஆடவர் மார்பினிற் சந்தனமே சுக
மாமனைதோசறுமிச் சந்தனமே
பாடமின்னார் குழக் கண்மலரே சிறப்
பாய் விளையாடுபவர் கண்மலரே (39)

மங்கையரப் புயம் பொற்பணியேதவ
மா தவர்க்கன்பர் செய்பொற்பணியே
பொங்கு மலர்த்தடத்தே கனகம்மனே
பொக்கிஷத்தே நிறையுங் கனகம். (40)

பூம்பொழித்தேனுணும் வண்டுகளே மாதர்
பூட்டுவர்அம்கையில் வண்டுகளே
காம்புயர் தோளருரத்தாரம் வீட்டிற்
கண்ட விருந்தினிதுத்தாரம். (41)

வீதியெங்குந்திருச் சந்தனமே பெண்கள்
மேலில்ரவிக்கையுட் சந்தனமே
சோதிதருங் கோபுரவாயில் அன்பர்
செல்வர் கண்ணம்மை யென்றேவாயில். (42)

போற்றுவரங் கொன்றைத் தாமரையேதடம்
பூத்திருக்கும் மலர்த் தாமரையே
ஏற்றமின்னர் மொழி யுஞ்சுகமேயகம்
எங்கும் நிறைந்திடு மஞ்சுகமே. (43)

பூங்குயிலேத்தருமன் கொடியே மலர்
பூத்திருக்கும் பசுமென் கொடியே
ஓங்குதருக்கள் கள்ளம் பயிலும்பொது
ஒண்டொடியார்கண் கள்ளம்பயிலும். (44)

பூந்தருவார்கண மாவனமே யதிற்
போயுறைவார்களு மாவணமே
மாந்தர்கண் மெய்யினிற் பூசாரம்விலே
மதிப்புக் கெட்டிடாப்பூ சாரம், (45)

கச்சிருக்குமட வார்தனமே கடன்
காப்பதடுத்தோர் களேத்தினமே
குச்சிருக்குங்குழற் சோதியிலே தச்சுக்
கொண்டது கன்னளர் சாதியிலே. (46)

முடுகு

நாதந்தரு வேதந்தனை மீதன்புடன் ஒதுங்குண
நான்மறையோர்மறு கோர்புறமாம்
நீதங்கொடு வேதந்தனை யோதுந்திறல் யாதும்பெறு
நீர்மன்னர் வீதிகள் ஓர்புறமாம். (47)

வஞ்சரினந்தனைச் சேராமல்மிகு
வட்டியெனு மொழி கூறுமல்
தஞ்சமென் றோர்க்குஅருள் செய் நாட்டந்தருந்
தன்மை வணிக பொருகூட்டம். (48)

ஏர்உழுங் காராளர் வீதிகளுஞ்சுகம்
ஈந்திடுஞ்சூத்திரச் சாதிகளும்
நேரிகல் கொள்குண நீக்கியே தினம்
நிற்பர்கள்நல்வழி நோக்கியே. (49)

தன்னுயிர்போல்மன் னுயிர்புரப்பார்நாலு
சாதியிலுள்ளவ ருஞ்சிறப்பார்
சொன்னவறத்துறை யைத்துறவார்தவத்
தோர்கள் பணிசெய் தலைமறவார். (50)

இன்னும்பலவளந் தாங்கியேதிசை
யெட்டினிலுமிசை யோங்கியே
மன்னும்பனசையைக் காத்திடுவாள்திரு
வாலை கண்ணம்மைக்கண் பார்த்திடுவாள். (51)

முடுகு

பரிபூரணி சிவகாரணி திருநாரணி யுயாரணி
பண்ணவர் போற்றும் பசுங்கிளியாள்
அரிமீதினில் உறைமாதரி யரிசோதரி வரிவேல்விழி
அம்பிகைதுமபி முகனனையாள். (52)

வாலையுமைசெக மோகினியாள்வலி
வாய்த்திடுநற்சிங்க வாகனியாள்
சேலைப்பழித்தநற் கூர்விழியாள் கண்டு
தேனெனவேநிறை பான்மொழியாள் (53)

சங்கரிதேவி கவுமாரிதனைச்
சார்ந்தவர்கட்கருள் செய்வீரி
துங்கநிறைந்த திரிசூலிபணி
தொண்டர்க் கருண்மிகச் செய்நீலி. (54)

மன்னுங்கொடியினில் வேதாளியன்பர்
மனத்திலேயுறை கங்காளி
தன்னாடியார்களுக் கென்றுமுத்திவீடு
தந்திடுஞான வராகிசத்தி. (55)

மாலினியம்பிகை யாகிமன்னியிந்த
மண்தலமெங்கு நிறைந்த கன்னி
ஆலிலுறைவிண்டு மூர்த்தி தங்கைவானம்
அம்புவியெங்கணுங் கீர்த்திமங்கை. (56)

முடுகு

திருமார்பினின் முருகார்தொடை மருவார்புய
வறுமாமுக சேவற்கொடியுயர்ச் சேயுடனே பொருமே
ருவின் அருகாகவே யருமாமறை தருமாமுகப் புண்ணி
யனைமக வாய்ப்பயின்ருள். (57)

தொண்டரகந்தனி லேகுடியாள் பொலி
தோற்றிய தோர்இலுப் பைக்குடியாள்
தண்டருந்தாமரை மெல்லடியாள்செறி
சாலிவளர்ந்தசெந் நெற்குடியாள். (58)

நாவலர்மேலருள் செய்யுளத்தாள் நெல்லை
நல்கியதோர்பிரண் டைக்குளத்தாள்
மாவனத்தார்ந்த தெனுங்களத்தாள் நில
மல்கிநிறைந்தசா ணுங்குளத்தாள் (59)

வஞ்சரைப்பாய்மழுக் காந்தலினுள்வளம்
வாய்த்தநல்லான்செட்டி யேந்திலினுள்
கொஞ்சுமொழிவெல்லக் கட்டியினுள்தனங்
கூடியநன்மின்னஞ் செட்டியினுள் (60)

வேலைப்பழித்திடுங் கூர்விழியாள்கன
மேன்மையதாகுமோ ருப்புழியாள்
சோலைநிறைசேங்கை யாங்குளத்தாள்திருச்
சோழனுடைந்தைய னூர்குளத்தாள் (61)

மாசற்றவேழ்உருப் பத்தினிலும்நலம்
வாய்த்தவடகலை வேள்வியிலுந்
தேசுலவுநில முட்கிடையாள்குலச்
செய்யவருந்தரு நன்னடையாள் (62)

மாமதிவைகாசித் தேருடையாள்ஆடி
மாதமுளைக்கொட்டுச் சீருடையாள்
பூமனுங்கோலமதிக் கோலாட்டம்தையிற்
பூசம்எண்ணெய்க்காப்பு நாட்கூட்டம் (63)

அங்கயற்கண்ணி யெனக்கூறியருள்
ஆருங்கண்ணம்மை யெனத்தேரி
சிங்காரமாக்கும்மி தானடித்தால்நிதழ்
தேவிபெரும்புகழே படித்தால் (64)

செல்வமதிகமா வந்திடுமே மிகச்
சிறப்பு மென்மேலுந் தந்திடுமே
வல்பிணியாஞ்சுரம் ஏகுமே சயம்
வயிற்றுவலியும் போகுமே (65)

முடுகு

சித்தத்தினின் மெத்தத்துயர் பற்றித்தனு
சுற்றிக்கொடு தீவினை செய்யுஞ் சொரிசிரங்கும்
நத்திப்புனல் தத்திப்பெரு வத்திக்கிணை யொத்திப்படி
நாடுஞ்சிலந்தி வகைகளுமே (66)

ஈழைபிளவையு நீரிழிவும் வயிறு
ஏற்றம்பெருமலத் தின்கழிவுங்
கூழையுதிர்தலு நீர்ச்சிறுப்புந்துடை
வாளைகொடுந்துய ராம்வெறுப்பும் (67)

பாண்டுகிரந்தியும் வீக்கமும்ஏகப்
பற்றும்பவுந்திர நோக்கமும்
நீண்டதலைவலி வாதமேநிலை
நீங்கியோடுமே காதமே (68)

மூலகிராணிகண் குந்தமுஞ்செவி
மூடல்ஊமை முடதொந்தமுஞ்
சாலமலடுகன் னத்தோட்டம்வயிறு
தன்னிற்பொருமி வரும்வாட்டம் (69)

குட்டமுடன் கண்ட மாலைகளுங்காசக்
கூட்டமதாம் பெருஞ் சூலைகளும்
வெட்டையுங்குன்மங் கணைவலிப்பும்பேதி
மீரியபீனசத் தின்வலிப்பும் (70)

பின்னும்பல பிணி கால்ஒய்வுமிகு
பேதச்சலவை பெருவாய்வும்
மன்னுங்குளிரு கபகோழைமிகு
வாதனைசெய்திடுங் காதுஊளை (71)

இப்படிநோயுங்கண் ணேய்தீர்ப்பாள்நாம்
நாளென்றுஞ்சிறந்திட வேகாப்பாள்
செப்பமுடன்கும்மி செப்பும் பெண்காள்நீங்கள்
சீர்பெற வாழியைச் சொல்லுங்கடி (72)

பூவைகண்ணம்பிகை தான்வாழிகங்கை
பூண்டசோழீசர் மிகவாழி
பாவையெனுஞ்சிவ காமியுமேஅருள்
பண்ணவர்சித் தர்களும்வாழி (73)

அஞ்சனமேனி திகழ் வேங்கடாசல
மாகும்பெருமாளுந் தான்வாழி
வஞ்சகமில்ஏழு நகரெனவேநிதி
வாழும் வணிகரெலாம்வாழி (74)

வேதியர்வாழி தமிழ்வாழி யென்று
மேவியநாடு நகர்வாழி
ஓதியபாவலர் தான்வாழிகுமி
உவந்துரைப்போரும் வாழியவே (75)

முற்றிற்று.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜார்ய நம :

# திருப்பனசை வேங்கடாசல மாலை

## காப்பு

### வெண்பா

திட்டிதிதி சம்மாரஞ் செய்விளையாட் டாப்புரிந்தும்
எட்டெழுத்தா அண்ட மெலாமான—விட்டுணுவாந்
தென்பனசை வேங்கடமாற் செய்யபா மாலைசெப்ப
மன்குருகை யார்துணையா வார்.

[திட்டி, திதி, சம்மாரம்—படைத்தல், காத்தல், அழித்தல் எட்டெழுத்து—ஓம் நமோநாராயணாயநம; விட்டுணு—திருமால்; குருகையார்—நம்மாழ்வார்

## நூல்

### கட்டளைக் கலித்துறை

செய்யா ள்உறையகச் செய்யா எழிலியெனச் சிறந்த
மெய்யா அடியவர் மெய்யா விளங்கு வெண்வாரணச்செங்
கையா என்பால் அருள் கையாது உதவு நற்கஞ்சவிழி
ஐயா பனசைப்பதி வேங்கடாசல அச்சுதனே. (1)

[செய்யாள்—திருமகள்; எழிலி—மேகம்; கஞ்சம்—தாமரை; வாரணம்—சங்கு]

கல்லார்க்குஅரிது வன்கல்ஆர் அதர்ப் பெருங்கான் நடந்தும்
எல்லாரும்வான் புவியெல்லாம் அளந்ததும் எண்சதப்பேர்
வில்லார் பதியளவில்லாது மேவிஎன் மெய்யகம்நாச்
சொல்லாய் நிறைதுணைத்தாள் வேகங்டாசலச் சுந்தரனே. (2)

[அதர்—வழி; புவி—உலகம்; எல்லாரும்—ஒளி நிறைந்த; எண்சதம்—நூற்றியெட்டு]

நாதா நின்மேல் துதிநாதா நளினமெனத் துலங்கு
பாதா உன்பால் புகல்பா,தா எனக்கு அருள்பார்வை செய்ய
வாதா எக்காலும் தாவாத பனசைப் பதியில்வளர்
நீதா திருவேங்கடாசல மாதவ நின்மலனே. (3)

[பாதா—அடியினையுடையவனே; புகல்பா—புகழ்ந்து கூறும்பாக்கள்; நளினம்—தாமரை]

சீராப்பதிதுயில்சீரா காயாஎனச் செப்பும் உடற்
காரா, தாசர்க்கு உபகாரா அடியர் கருத்தின் மன்னும்
பேரா நல்ஆயிரம்பேரா எனக்கருள் பேணுவனத்
தாரா பனசைப் பதிமேவிய வேங்கடாச் சலனே. (4)

[சீராப்பதி—க்ஷீராப்தி—திருப்பாற்கடல்; காயா—காயாம்பூ]

குன்ருல் நிரைக்குலங்குன்ருது காத்து விளாக்கொள்கனி
கன்ருல்எறிந்து கைக்கன்ருது கண்டததியினுக்கா
வென்ருய் அசுரரை வென்ருய்அமலை புவிமினெடு
நின்ருய் எனக்கருள்செய் வேங்கடாசல நித்தியனே. (5)

[குன்ருல்—கோவர்த்தனமலையால்; நிரை—பசுக் கூட்டங்களை; விளா—விளாமரம்; அமலை—திருமகள்; புவிமின்—பூமகள்]

வந்தான்உன் சேய்மான்அவம்தான் புரிசமரால் என்னகம்
நந்தாது அருள்புரிநந்தா, அமளிநற்சீர நிறை
சிந்தாநின் சிந்தைகசிந்துஆனை வேந்தர்கள் செப்புசெப்பார்
சந்தா பனசைப்பதி வேங்கடாசலச் சற்குணனே. (6)

தூதா மன்ஐவர்கள் தூதா இரத்னந் துலங்கு குழைக்
காதா மதிக்கடங்காதா கலைப்பெண் ணெனத்தருந்தாட்
போதா இரங்கியிப் போதாவது ஆள்எனைப் பூவினுக்கு
மாதாவென வளர்மால் வேங்கடாசல மாதவனே. (7)

[ஐவர்—பஞ்சபாண்டவர்]

தீயார்க்கருள் உகந்துஈயா முராரி திருக்கமல
வாயா எனக்கு அருள்வாயா அடியார் எதிரில்வரு
நேயா உகந்துமுன்னே ஆயர்பாடியின் நின்றுவளர்
தாயா பனசைப்பதி வேங்கடாசலச் சோதியனே. (8)

மூன்நாக மேல்நடிமுன்னு அகத்தின் முளரிஉறை
பொன்னு மலேகொடு பொன்ஆக்குலத்தைப் புரந்துநின்ற
மன்னு நினேத்துதிமன்னு எனக்கருள்வாய் புரிசை
மின்னுர் பனசைப்பதி வேங்கடாசல விண்ணவனே. (9)

[நாகம்—காளிங்கன் என்றபாம்பு; நடி—நடனம்செய்யும்; அகத்தின்முளரி—உள்ளத்தாமரை; மலே—கோவர்த்தனமலே; துதிமன்னு—துதிக்காத; புரிசை—கோட்டை]

பூமா எனதுஅனேப்பூமா பொருந்தப்புனே துளவத்
தாமா அரிபரந்தாமா மறைஅறையுஞ் சகத்தர
நாமா நிதமகநா மாதவாவென நாடவரம்
தா,மா பனசைப்பதி வேங்கடநற் றயாநிதியே. (10)

[அனே—திருமகள்; தாமா—மாலேயணிந்தவனே; சகத்தரநாமா—1000 பெயர்கள் கொண்டவனே;]

கண்ணு மறைத்தலேக்கண்ணு கதிரொளி தங்குபுவி
விண்ணு நினேத்தினம் விண்ணு வெனக்கருள் மேகநிற
வண்ணு கதிதரு வண்நாயகா பனசைப்பதிவாழ்
அண்ணு திருவேங்கடாசல மால்எனும் அற்புதனே. (11)

நத்தானே, யன்பிலவரை நத்தானே நவிலுசன்மம்
பத்தானே மாதுசம்பத்தானே மோட்சப் பதியினுக்கு
வித்தானேக் கீதைசொல் வித்தானேக் கந்தமிகுந்த துளவக்
கொத்தானேத் தாலப்பதி வேங்கடவனேக் கூறுவனே. (12)

[நத்தானே—சங்கினேயுடையானே; நத்தானே—விரும்பாதவனே; சன்மம்பத்து—தசஅவதாரம்; மாது—திருமகள்; கந்தம்—மணம்]

தொடையான ரம்பைநிகர் தொடையான் தொண்டர்க்கு
என்றுந்துன்பம்
படையான் கரத்தினில் வாட்படையான்பவப் பௌவம்எனே
யடையான் அமளி வடத்தடையான்அடி யார்அகத்தில்
உடையான் பனசைப்பதி வேங்கடாசல வுண்மையனே. (13)

[பவம்—பிறவி; பௌவம்—கடல்]

மதியானபத்தர் தமைமதியான் கயம் வாவெனமுன்
கதியால் நடந்து உதவுங்கதியான் பொய்க்கசடர் முன்வந்து
உதியான் அடியர் கணத்துதியான் எனைத்தொல் பவத்தில்
பதியான் பனசைப்பதி வேங்கடாசல உத்தமனே. (14)

[கயம்—யானை; கதியாய்—விரைவாக; துதியான்—
துதியாமல்உள்ளவன்; பவத்தில்—பிறவியில்]

கரியான்,உடல மெலாம்கரியான் கருதார் கள்துன்பம்
அரியான் கரத்தினிலே யரியானலர்ப் பொன்னைவிட்டுப்
பிரியான்அசுத்தர்களைப் பிரியான் பிறப்புஎற்குஅகற்ற
உரியான் பனசையில்வாழ் வேங்கடாசல வுத்தமனே. (15)

வீட்டான்எனைப்பவம் வீட்டான் விசையன் விசைப்பரித்தேர்
மீட்டான்இபத்துயிர் மீட்டான்இழிதொழில் வீணர்க்கு இன்பங்
காட்டான் மதுவனக்காட்டான் எனக்குக் கதிதருநல்
நாட்டான் பனசைப்பதி வேங்கடாசல நாரணனே. (16)

[விசயன்—அர்ச்சுனன்; இபம்—யானை]

தலையானை என்னைப்பவத்து அலையானைச் சமருக்குஅஞ்சி
மலையானை வேங்கடமாமலையானை வழுத்தும்எண்ணெண்
கலையானை யன்பர்கணங் கலையானைக் கரத்தினில்செஞ்
சிலையானைத் தாலப்பதி வேங்கடவனைச் சிந்திப்பனே. (17)

[சமர்-போர்; எண்ணெண்கலை-அறுபத்துநான்குகலை;
அன்பர்கணம்—அன்பர்கூட்டம்]

தரத்தான் எழில்நிறை யந்தரத்தான் பகையைத் தகர்க்குஞ்
சரத்தான் அசரசரத்தான் தரணிதனை மறைசக்
கரத்தான் இருசதுரக்கரத்தான் எனைக்காக்கும் மஞ்சுஆர்
புரத்தான் பனசைப்பதி வேங்கடாசலப் புண்ணியனே (18)

[அந்தரத்தான்—ஆகாயத்திலுள்ளான்; சரம்—அம்பு;
சதுரக்கரம்—சதுரக்கை; மஞ்சு—மேகம்]

மாவானைக் கல்கொடு மாஆனைக்காத்த வனைவலிகொள்
ஏவானைக் கூற்றை யெற்குஏவானை வேதாம் இலங்குபண்ணார்
நாவானைத் தாசர்முன் ஆவானை இன்பநலமிகு பண்
பாவானைத் தாலப்பதி வேங்கடவனைப் பற்றுவனே. (19)

[கல்—கோவர்த்தனமலை; ஆனைபசுக்களை;
முன்ஆவானை—முன்தோன்றுமவனை;]

கோலாகரத் தரிக்கோலா, நற்கோசலை கொஞ்சும்இன்பப்
பாலாபுவியில் என்பால் ஆதரம்புரி பண்டுபண்டி
காலால்உதைத்து ஒளிகாலாதவன் எனக்காட்டு மெய்யின்
சீலா எனக்கருள்மால் வேங்கடாசலச் செங்கணனே. (20)

[பண்டு—முன், பண்டி—வண்டியாகவந்தசகடாசுரன்]

கத்தா அடியர் அகத்தா தவத்தில் களங்கம்இலார்
சித்தா தனுமுன்ஒசித்தாய் புவிதனிலே செனனம்
பத்தா வருதுள பத்தாஉனது கண்பார்த்து எனையாள்
நித்தா பனசைப்பதி வேங்கடாசல நின்மலனே. (21)

[செனனம்பத்து—தசாவதாரம்]

வீசுஅலை மீதில்துயில் அரங்கா வெண்நகைத் துவர்வாய்க்
கோசலை பெற்றகுமரா அடியன்இக் கூவினிலே
காசுஅலை மாலைத்தனத்தார் புரியுமயல் கலக்கம்
மாசுஅலை நீக்கி இன்றுஆள் வேங்கடாசல மாயவனே. (22)

[துவர்—பவளம்; கூவினில்—பூமியில்;)

சீராம ராமன்எழில்வதனு சிறியேனேயுற்ற
தீரா மனக்கவலைப் பிணிமாற்ற நின்சேவடிதா
பேரா மன்ஆயிரநாமா புயம்பிரியாத் துளவத்
தாரா மன்பனசைப் பதிவாழ் வேங்கடாசலனே. (23)

[ஆயிரம்நாமம்—1000 பெயர்கள்]

மாதா உதரந்தனில் பிறந்தே வருந்தாதுஎனக்கு
நீதா உதரம் திருவேங்கடமலை நின்றமெய்யா,
பூதா வுதரவுர நாரணா பொன்னிலங்கை எய்த
நாதா உததியில் வேங்கடாசல நாயகனே. (24)

[உதரம்—வயிறு; உததி—கடல்;]

வான் அரசு இந்திரன் வேதா தவமுனிவோர் வணங்க
மால்நரசிங்கம் எனத் தோன்றி தூண்நடு வந்துஉதித்த
கோன்அரசின்கண் விருப்புஅற்று அடவியில் சென்றகொண்டல்,
வானர சீயம்அனுமன்கு அருள் வேங்கடமாலவனே.

[வேதா—நான்முகன்; கொண்டல்—மேகம்
போன்றவன்] (25)

மாதா இருந்த மலர்ப்பொழில் சூழலில் வல்லரக்கன்
ஓதா விருந்தில் தவவடிவு ஏந்தியுழல் வினையால்
தீதா விருத்தம் புரிந்தோன்உயிர் செகுத்தோன் எனையாள்
நீதா, விருந்தையணி வேங்கடாசல நின்மலனே.

[மாதா—சீதை; வல்லரக்கன்—இராவணன்] (26)

நாரணன் கேசவன் மாதவன் மாயவன் நாலெனச்சொல்
ஆரணன் தேடற்கு அரியவன் ஆதிஎன அழைத்த
வாரணம் காக்கமுன்ஒடி வந்தோன் என்தன் வன்மனம் வாழ்,
காரணன் தாலப்பதி வேங்கடாசலக் கார்வணனே.

[வாரணம்—யானை] (27)

மாவல் நந்து ஆரக்குலம் ஈன்று சாலின்வழி யுலவப்
பூவனம் தாவுந் நடஞ்சூழ் பனசைதனைப் புரக்குந்
தேவன் நந்தா முகுந்தாநீ எனக்குஅருள் செய்திடுவாய்
காவனநந்தா வேங்கடாசல மாதவக் காகுத்தனே. (28)

வேத சரதமுடையாய் கமலமென விளங்கும்
பாத சரவசரந்தருவானைப் பரிந்து அளித்த
போத சரத்துளபா நாராணா அருள்பூத்து எனைஆள்
மா,தசரதமன்சேய் வேங்கடாசல மாதவனே.

[சரவசரம் – சராசரம்; தருவானை – நான்முகனை (29)

நாகம்தனில் துயில் மாமணியே தொண்டர் நாடியுன்ன
ஆகந்தனக்கு அஞ்சனக்குன்றெனக் கொண்டஆழி ஐயா,
மாகந்தனிந்தென்று போதனும் போகியும் வந்துபணி
நாகந்தனங் கதியேற்குஅருள் வேங்கட நாரணனே.

[நாகம்—ஆதிசேடன்; ஆகம்–மார்பு;
அஞ்சனக்குன்று—மைக்குன்று; போதன்—நான்முகன்
போகி– இந்திரன்] (30)

திருவன மாலிகைத் தோளும் பஞ்சாயுதஞ் சேர்ந்தகையும்,
பெருபனப்பு ஆர்முகத்தாமரை பூக்கணும் பேசுமுகில்
உருவனமேனியுங் கண்டுஅடியேன் தொழுது உய்யஅருள்
மரு,வனஞ்சூழ் பனசைப்பதி வேங்கட மாலவனே.

[பஞ்சாயுதம்–ஐம்படை; சங்கு, சக்கரம், வில், வாள்
கதை] (31)

வேங்கடாசல மாலை முற்றுப் பெற்றது.

ஸ்ரீ :

ஸ்ரீமதே இராமாநுஜாய நம

# திருப்பனசை இராமாநுஜ திரிதச வெண்பா

## நம்மாழ்வார் துதி

### வெண்பா

ஆதி பரமபதத்து ஐயன் அருளால் அணைவிட்டு
ஓதரிய பூதூரி லேயுதித்த—நாதன்எழில்
மெய்யனிரா, மாநுஜவா, சாரியன்வெண் பாவிளம்பத்
துய்யசட கோபன் துணை.

[அணை—ஆதிசேடனாகிய படுக்கை; பூதூர்—ஸ்ரீபெரும் பூதூர்]

## நூல்

பூப்பொழிலும் நெல்வளமும் பொன்னிறைவும் பொங்கிமலர்
மாப்பொலியுந் தென்பனசை வாழ்வோங்கக்—காப்புகந்த
கோனே குணமலையே கோவேரா மாநுஜப்பூ
மானே மகிழ்ந்துனையாள் வாய் (1)

நீருநில னுந்தலமு நீள்புவியி லேநிறைந்த
சீரார்பூ தூர்மறையோர் செய்தவத்தால்—பாரதனில்
வந்தஇரா மாநுஜஆ சாரியமா வானவஎன்
பந்தவினை தீரக்கண் பார். (2)

ஆசூரி கேசவருக்கு ஆதிரைநாள் அம்சேயாய்
மாசூருது அம்மறையோர் மாமனத்துள்—தேசூறு
ஞானம் பகர்ந்தநல்ல ராமா நுஜமுனியே
யான்நம்பி னேன்நின் னடி. (3)

வையத் தவர்மனத்துள் வல்லிருளுக் குஓர்ஞானத்
துய்யகதிர்ச் சூரியனுய்த் தோற்றியமெய்—ஐயனே
மாசறுசீ ரோங்கும்இரா மநுஜத யாபரமா
வாசமலர்த் தாள்என்உளம் வை. (4)

பொய்யர் மனேசிலேயில் பூவாநின் பூங்கமலத்
துய்யமலர்த் தாள்என்முடி சூட்டியாள்—செய்யபசும்
பொன்னே மணியே புனிதஇரா மாநுஜப்பூ
மன்னே மனமது வந்து. (5)

[சிலே—கல்]

நாரணனே நான்மறையு நற்பஞ்ச கிருத்தியத்துக்
காரணனென் றேஉரைக்குங் காட்சியே—யேரணமாய்க்
கொண்ட—கொண்ட லேமறையோர் கோவேரா மாநுஜனே
தண்டா மரைப்பதத்தைத் தா. (6)

[பஞ்சகிருத்தியம்—ஆக்கல், காத்தல், அழித்தல்
முதலிய ஐந்தொழில் கொண்டல்—மேகம]

பன்னிருவர் ஆழ்வார்கள் பாலும்ஆ சாரியராய்
மன்னியதா சர்க்குவழி வந்ததொண்டா—இந்நிலத்தில்
நின்றரா மாநுஜப்பேர் நித்தியனே நின்பதத்தை
என்றுமற வாவரம்எற்கு ஈ. (7)

சாலேக் குளிர்கூபந் தண்பே ரருளாளர்
பாலுய்க்கும் பத்திமனப் பண்ணவனே—வேலேக்கு
நேராய் நிறைகருணே நீதரா மாநுஜனே
தாராய்உன் கஞ்சமலர்த் தாள். (8)

[கூபம்—கிணறு, கஞ்சம்—தாமரை]

பொன்பெரிய நம்பிஅடி போற்றஅவர் பூரணமாய்த்
துன்னு ரகசியத்துத் தொல்நூலே - நன்னயமாய்ச்
சாதிக்கப் பெற்றதனிச் சற்குணரா மாநுஜனே
ஆதிஅனந் தாவனந்தந் தாள். (9)

[சாதிக்க—சொல்ல; அனந்தா—ஆதிசேடன்

நல்லதிருக் கச்சிநகர் நம்பிபருள் நன்னெறியைச்
சொல்லச் சுருதியெனத் தோய்ந்துநின்ற—வல்லவனே
பாஷியத்தைப் பண்ணிவைத்த பண்டிதரா மானுஜனே
சேஷமுனி யேஉன்அருள் செய். (10)

[பாஷியம்—பதஞ்சலி சூத்திரத்திற்குஉரை; சேஷன்-
ஆதிசேஷன்]

கோட்டியூர் நம்பிமனக் கோள்அறிய மூவாறு
நாட்டுந் தவணையுறு நாள்நவில—மீட்டுமனம்
வாடாமல் மந்திரங்கொள் மன்னேரா மானுஜனே
தேடா எனைச்சிறக்கச் செய். (11)

என்னெளிப்பேர் அந்தணனும் யாத்திரைக்கே சென்றுவஞ்சம்
ஒன்றியதை ஓர்ந்துணர்ந்த உத்தமனே—வன்றிறலாய்
வந்தமதம் புன்சமய மாற்றியரா மானுஜனே
வந்தபதம் தந்தருளு வாய் (12

வில்லியும்வே டச்சியுமாய் விண்டுதிரு வோடுகச்சி
நல்லிருள்கண் டேநயந்த நாயகமே—பல்லுயிரைத்
தன்னுயிர்போல் எண்ணு தயைசாரும் இராமானுஜனே
என்னையுமே ஆட்கொள்இனி. (13

ஆளவந்த மாமுனியை அன்புளஆ சாரியராய்க்
கேள்உவந்து கிட்டுங் கிளரொளியே—நாள்அவமாய்ப்
போகாத் தவம்புரிந்த புண்ணியரா மானுஜனே
வாகா உவந்துமகிழ் வா. (14)

[ஆளவந்தார்—இராமானுஜரின ஆசிரியர்;
கேள்—உறவு;]

சீர்பெரிய நம்பிதிருத் தேவியெண்ணெய் தேய்த்தவர்பாற்
பாரிக்கு மூன்றுபிழை பாரரட்டி—ஊரறிய
மாசந்தி யாசியென வந்தரா மானுஜனே
பாசமற வேயருள்கண் பார். (15)

மண்டியகூ ரத்தாழ்வான் மாமுதலி யாண்டானுந்
தண்டும் பவித்திரமாய்த் தான்தரித்து—வண்துளப
மாலேயணி மாற்கடிமை வாய்த்தரா மாநுஜனே
வாலறிவு தந்தெனேயாள் வாய். (16)

[கூரத்தாழ்வான், முதலியாண்டான் — வைணவ அடியார்கள் ]

கச்சிநகர் மன்சேய் கனபிரம ரட்சுவினுல்
அச்சம் புரிந்தா டலேயகற்றி—நிச்சயமாய்
நின்ற பரத்துவ நிராமயரா மாநுஜனே
இன்றுறெனது நோய்தீர்ப்பை யே. (17)

[மண்சேய்—அரசனுடையபிள்ளே; பிரமராட்சி—பேய்;

பொய்கையரைப் பூதரைமெய்ப் போதமுறும் பேயாரை
ஐயன் திருமழிசை யாழ்வாரைக்—கைகுவிக்குஞ்
சொல்லரிய ஞானச் சுடரேரா மாநுஜனே
நல்லறிவு தந்தருள்மன்னு. (18)

[பொய்கையரை—பொய்கையாழ்வார்; பூதரை—பூதத்தாழ்வார்; பேயர்-பேயாழ்வார்; போதம்-ஞானம்]

வேதந் தனேத்தமிழான் மேதினியி லேவிரித்த
நாதன்எனு நம்மாழ்வார் நாண்மலர்ப்பூம்—பாதமதை
சென்னிக் கணியெனவே சேர்க்குமிரா மாநுஜனே
தன்நிகரும் பொன்னடியைத் தா. (19)

கூட்டு மதுரகவிக் கொண்டல்குல சேகரர்தாள்
நாட்டும் உளநலத்து நாயகமே—பாட்டளிசூழ்
தாரார் தடம்புயத்துத் தண்ணளிரா மாநுஜனே
தாராய் எனக்குஉன் அருள் தாள் (20)

[மதுரகவி—மதுரகவியாழ்வார்]

எத்திசையும் போற்றும் எழில்பெரியாழ் வார்விண்டு
சித்தர்திருத் தாள்மலரைச் சென்னியணி—உத்தமனே
கோனே. அமிர்த.குண னே,ராமா நுஜக்கோ
மானே மகிழ்ந் துளனையாள் வாய்.

[விண்டுசித்தர்—பெரியாழ்வாருக்கு மறுபெயர்]

வேண்டாதார்க் குளட்டா விமலை வில்லிப்புத்தூரின்
ஆண்டாள் அடிக்கமலம் ஆதரிக்க—வேண்டுதிருக்
கோலமாய் வந்த தணக் குன்றே,ரா மாநுஜனே
மாலாய் மகிழ்ந்தென்முன் வா. (22)

தொண்ட ரடிப்பொடியார் தூயதிருப் பாணழ்வார்
புண்டரீகத் தாள்போற்றும் புண்ணியனே—எண்திசையும்
நல்ல வைணவத்தை நாட்டிய,ரா மாநுஜனே
வல்லவனே வந்தெனையாள் வாய். (23)

[தொண்டரடிப்பொடியார்—ஆழ்வார்களில் ஒருவர்
புண்டரீகம்—தாமரை]

மால்அரங்கர்க் குஎழுமதிள் மண்டபம் கோ,யில்பணிசெய்
சீலர்திரு மங்கையர்சீர்ச் செங்கமலக்—கால்மலர்கள்
உள்ளத் திருக்கும்உயர் உத்தம,ரா மாநுஜஎன்
கள்ளத் திருக்குஅகற்றிக் கா (24)

பாரிற் பரசமயம் பாலிப்பார் கோளரியாய்
ஆரியநூல் ஆகமங்க ளால்அமைத்துப்—பேரருளால்
ஆதிவை ணவம்நன் ருக்கிய,ரா மாநுஜனே
கோதகல வந்துஎனையாட் கொள். (25)

[கோளரி—கொல்லும்சிங்கம்; ஆரியநூல்—வடநூல்]

பன்னேழ் தினம்வாதம் பண்ணினவ னும்பணிய
மன்அரங்கர் மாயாவா தம்வாதி— யென்னஉரை
அற்புதத்தால் ஆனந்த மாகிய,ரா மாநுஜனே
நற்பதந்தந் தாள்வாய்இந் நாள். (26)

[பன்னேழ்—பதினேழு]

ஆழ்வார்க ளால்அருள்நா லாயிரத்தை அம்புவியில்
வாழ்வார்க் குதவவரம் வாங்கிவந்த—ஆழ்தவத்தோன்
நாதமுனி தாள்நளின நாடிய,ரா மாநுஜனே
பேதமெனக் கின்றே புரி. (27)

[நாலாயிரம்—நாலாயிரதிவ்யப்பிரபந்தம்;
அம்புவி—உலகம்; நாதமுனி—வைண ஆசாரியர்களில்
முதல்வர்; நளினம்—தாமரை; போதம்—ஞானம்]

செந்தா மரைநயனத் தேசும் திருவதனத்(து)
இந்தாதுஆர் ஒளி எழிலும் என்றுஅடியேன்—சிந்தையினிற்
கண்டுகளிப் பேன்இனிய கற்பக,ரா மாநுஜனே
அண்டர்பிரா னேஎனையின்று ஆள். (28)

[திருவதனத்து இந்து ஆர் ஒளி இந்து—சந்திரன்
என்றெண்ணலாமோ நயனம்—கண்; தேசு—ஒளி;
வதனம்—முகம்]

பொய்யாம் பலசமயப் புன்மையர்புந் திக்கசட்டை
மெய்யாம் வைணவத்தா லேவிளக்கும்—ஐயாஉன்
அன்பர்க் கிகபரம்நன் ருக்கிய,ரா மாநுஜனே
இன்புற் றுஎனையாள்வை யே. (29)

கந்தசத்தன் மாபலிபொற் கண்ணன் கனகனையும்
வெந்தசத்தாய் வென்றுவிட்ட விண்டடியார்—சிந்தைமகி
ழாகப் பணிபுரியும் அற்புதரா மாநுஜவென்
ஆகப் பலபிணிதீர்த் தாள். (30)

[பொற்கண்ணன்—இரணியாட்சன்;
கனகன்—இரணியன்; விண்டு—விஷ்ணு
ஆகம்—உடல்]

முற்றிற்று

# நாட்டரசன்கோட்டையென்னும் பனசைநகர் பெரியகருப்பண்ண சுவாமிபேரில் பதிகம்

நூல்

திருவுலவு நவரத்ந மகுடவில்நுதல் தன்திலக சேவை மதிவதன நகையுஞ்
சீர்கருணையுங் கொடியபார்வையு நிறைந்தபூத் திட்டியுஞ் செந்தகர்க் கோட்டு
உருவென முருக்கு வலுமீசையு மலைப்புயத்து உத் தரிகவல்ல வாட்டும்
ஒளிமிகும் அலங்கிருதஆ பரணம் ஊர்ச்சல்லடத் தோடி ருக்கு கச்சும்
மருவலர்தனைச் செருக்கின்ற தண்டு அரிவாளும் மஞ்சு காயாவின் மலரும்
மருவுதனு கண்டுஉனது தாள்மலர் வணங்கவே வாய்மை யொடு கருணைபுரிவாய்
கருதரிய பூசுரர்கள் அரசர் தனவைசியருங் கைகுவிக்கின்ற இறைவா
கனகநிரை முகில்கள்உறை தருபனசையிற் பெரிய கருப்பண்ணசாமி முகிலே (1)

[தகர்—ஆட்டுக்கடா; கோடு—கொம்பு; மருவலர்—பகைவர்]

பூநாதன்அச்சுதன்அரவில்துயின்றவன் புள்ளுலவு கேதனத் தோன்
புண்டரிகலோசனன், மாதவன், கேசவன், புகலுந்தி பூத்தமுதல்வன்
தேன்நாறு துளபமணி நாரணன்மாயன் மால்திகிரியசிதண்டு சங்கு
செய்யதனு ஆயுதன் மீன்ஏனமாகிச் சிறந்திடும் கூர்மமாகி
வானநர அரியாகி வாமனங்குறளாகி வன்பரசு ராமராமன்
வந்த பலபத்திரன் கண்ணனெனும் விண்டுதரு மைந்தனே என்னையாள்வாய்

காநாடெனைப் பொலிந்து எந்நாளுமே தனம்காக்ஷி நலமேவி வளரக்
கனகநிரை முகில்கள்உறை தருபனசையீற் பெரியகருப் பண்ணசாமி முகிலே. (2)

[புள்—கருடன்; கேதனம்—கொடி; புண்டரிகம்—தாமரை; லோசனன்—கண்ணையுடையவன்; உந்தி—கொப்பூழ்; ஏனம்—பன்றி; கூர்மம்—ஆமை; நரவரி—நரசிங்கம்; வாமனம்—வாமனவதாரம்; பலபத்திரன்—பலராமன்; விண்டு—திருமால்; காநாடு—இந்திர உலகம்]

ஜோதியென நிரைபரமபத நாதருக்குரிய சுகுண சுதனுகிவந்து
தூயதன வணிகர் பணிகுல தெய்வமாகி இத் தொல்லுல கில் நித்தநித்தம்
நீதிநெறி தவருதபேய் வெட்டி காளைதன் நீண் மரபில்ஆ வேசமாய்
நிர்த்தனஞ்செய்து மெய்க்குடி யடிமையாளர் தன்நெஞ்சி னில் நினைத்தகேள்வி
ஓதி அவரவர்கள் குறையோட்டித் தனம்தனையர் உண்மை யுடனே யளித்து
ஒருநாளுமழியாத சுகலாப மேன்மை தந்துதவி புரிகின்ற தேவே
காதளவு தாவுவிழிமாதர் நடைஓதி மங்கண்டு கற்றறிய மருவக்
கனகநிரை முகில் கள்உறைதரு பனசையிற் பெரிய கருப்பண்ணசாமி முகிலே (3)

[பரமபதநாதர்—திருமால்; சுதன்—மகன்; தனம்—செல்வம்; தனையர்–மைந்தர்; ஓதிமம்—அன்னம்]

மஞ்சிலெழு மின்னலைக் கானல் நீரைப்புனல் வரைந்திடும் எழுத்தையொத்த
வாழ்வினில் அழுந்தா தழுந்திக்கிடப்பனே வன்துயர்க் காளாவனே
தஞ்சமென மெய்யடியனவனே நோயில்தளர்ந்து நானுழலு வேனே

தரை மீதிலாடியில்உழுந் துருளுமளவும் உன்தாளினை
வணங்கஅறியா
வஞ்சன் இவன்என்றெனைக் கருதாது சந்ததி வழித்தொண்டு
புரியுமுறையில்
வந்தவனெனப் பெருங்கருணை வைத்தின்று நீ வந்திடச்
சமயமையா
கஞ்சமலர்மாது பாரதியும் அகலாமல் எக்காலத்தினுந் துலங்கக்
கனகநிரை முகில்கள் உறைதரு பனசையிற் பெரிய
கருப்பண்ணசாமிமுகிலே. (4)

[மஞ்சு—மேகம்; ஆடி—கண்ணாடி; கஞ்சம்—தாமரை;
பாரதி—கலைமகள்)

என்றைக்கும் நாமிருந்திடுவம் என்றெண்ணி இவ்வுலகத்தில்
எந்நாளும்
இரக்கந் துறந்து வஞ்சனை, கரவு, பொய், கெடுதி
ஏற்றமுடனே புரிந்து
நின்றும் அஞ்சாத மதியீனர்கள் அனேகர்தான் நெட்டூர
வார்த்தைகூறி
நித்தமும் அரட்டரெனவே மிகமிரட்டிஊர்நிதி புவியி
லாசை வைத்து
ஒன்று மறியாது அலையும் மடையரால்எனது நெஞ்சு உழலா
திருக்கவரம் நீ
உண்மையொடு தந்துகாத்து அழியாத சுகமேன்,மை
உதவிடத் தருணமிதுவே
கன்றைக் கரத்தெடுத்தே விளவெறிந்த பூக்கண் ணனருள்
கின்ற கடலே
கனகநிரை முகில்கள் உறைதரு பனசையிற் பெரிய
கருப்பண்ணசாமி முகிலே. (5)

[கரம்—கை; விளவு—விளாமரம்;
பூக்கணன்—திருமால்]

பூவரசரைப் பெரும் பொருளாளரைக்கொடிய பொய்யரைப் புகலவரிய
போதமிகு தெய்வங்களாகிய அனேகரைப் போற்றித் துதித்து நித்தம்
நாவுக்கிசைந்த தமிழாலினிய பிரபந்தம் நாளுநாளும்படித்து
நானுமொரு பலனுமறியாமலே குலதெய்வ நாதனென உன்னைநாடி
பாவைப்பகர்ந்து நின்றேன் அடிமைமீது நீபக்ஷம் வைத்து எந்தநாளும்
பாதுகாத்தென்குடி சிறந்திடப் பெருவாழ்வு பாலிக்க வேணும் அப்பா
காவிற்சொரிந்த தேனங் கழனியிற்சென்றுக வினிலகு சாலி விளையக்
கனகநிரை முகில்கள்உறைதரு பனசையிற் பெரிய கருப்பண்ணசாமி முகிலே (6)

வானில் வருமின்னற் பிரகாசமே, நிரைவால மதிவிம்ப மாரிமேக
வள்ளலெனும் வஸ்த்துவே, தாபந்தவேளைக்கு வரம்உதவி வந்து காக்கும்
யீனமதிலாக்களை யினிரசமதுவே, கனிக்கினிய வமுதே, யிசைந்த
எழிற்கற்பகாடவிப் பூப்பெருக்கே, நீலமேயும் புயக்குன்றமே,
தேன்நிறைந்திலகு வனமாலிகைத் தொங்கலணி தெய்வமே, தேவதேவே,
செந்தமிழ்க்கினிய வரம்உதவுகடலே, யுனதுசேவை தந்துஎன்னையாள்வாய்
கானமறை ஒலியின் இலக்கண விலக்கியக்காதை புரிவண்மை பெருகக்
கனகநிரை முகில்கள்உறைதரு பனசையிற் பெரிய கருப்பண்ணசாமி முகிலே. (7)

எந்நாளும் இந்நகரில் வீரகண்டான்என் எழிற் புனல்
இலங்குவாவி
இசையும்அக்கினி மூலையிற் கோவில் கொண்ட
நாளிதுவரை யுன்அடியர் மீது
சன்னதமதாகிப் பணிந்தவர் கருத்தினைச் சாற்றிப் பிரசாதம்
ஈய்ந்து
தருணமதுஅறிந்துதவு கொண்டலே! பூவினில்தன்
னிகரிலாத மெய்யா!
இந்நாளிலே யொன்று பேசாதிருப்பதுஇக்கா லத்தினியல்பு
தானோ
இவ்வூரினில் கசடர் மிஞ்சிமுறை தப்பினார்என் னவுங்
கருதி நின்றோ
கன்னெஞ்ச மாயிங்கிருந்திடுதல் நீக்கிநற்கரு ணைப்பிரவாக
மீவாய்
கனகநிரை முகில்கள்உறைதரு பனசையிற் பெரிய
கருப்பண்ணசாமி முகிலே. (8)

வந்தியும்இரங்குவாள் பித்தரும்இரங்குவார் வன் பேயுமே
யிரங்கும்
வகை, கெட்டுஉருட்டுப் புரட்டினைச்செய்கின்ற வஞ்சருங்
கொடியஜாதி
வந்தஅறிவீனரும் இரங்குவாராகாத மாவினையு மேயிரங்கும்
மதிகெட்ட மடையர்புரி தீவினையினாலடிமை வாடுவது
கண்டிருந்துஞ்
சிந்தையில் திருவுளஞ் சற்றிலும்இரங்காத செய்கையிது
ஞாயமில்லை
தெள்ளூற்ற செந்தமிழ்க் கினியவரம் ஈகின்ற தெய்வம்
நீயென்னையாள்வாய்
கந்தமிகு பூம்பொழிற் பொய்கை செந்தாமரைக்காடு மலர்,
சொரியும் வளமுங்
கனகநிரை முகில்கள்உறைதரு பனசையிற் பெரிய
கருப்பண்ணசாமி முகிலே. (9)

மண்ணுலகிலெல்லோரும் வந்திக்கும் நின்னிரு மலர்ப்பதம்
போற்றவிலையா,
மாசிலா நீயுமென் பால்இரும் பாகலா மன்னுஞ்
சராசரத்தில்
எண்ணரிய யானைமுதலிரெறும் பாதியா பெவ்வுயிரு
மென்றும் வாழ
இச்சையொடு காக்கின்ற தொழிலாளியாமுனைக்கு
எந்நாளும் எந்தன் மாபார்
நண்ணு தொண்டாக விச்சந்ததியில் வந்தவென் நலிவினைத்
தீர்ப்பது அரிதோ
நல்லதொரு வல்லமையிதா பேசமவுனமா நளிலில்
வாய்முத்து உதிருமா
கண்ணுறுதல் செய்துஎனைக்காத்து ரெக்ஷிக்க இக்காலமிது
சமயமையா
கனகநிரை முகில்கள்உறைதரு பனசையிற் பெரிய
கருப்பண்ணசாமி முகிலே. (10)

[வந்திக்கும்—வணங்கும்; கலா—கல்லா]

கோலமயிலாக எவ்வுலகமு மளித்த பொற்கொண்டல்
காமாக்ஷி யுமையுங்
கோதிலாதுஅடியவர்கள் ஆபத்து வேளைக்குறிப்
பறிந்துதவு நிபுணன்
சீலமிகு காத்தமுத்தையன் முன்னோடியுந்திறல் வீரபத்திர
தேவுஞ்
செப்பு முனியரசு சமையன்சோணைஇருளனும் தேவி
ராக்காயி பேச்சி
ஆலவிழி நீலி யென்தந்தையைக் கற்குறடு அமைத்திடச்
சொல்லியென்னை
அருமையொடு தந்துஎனது சந்ததிஎளங்கவே
அருள்புரிந்தவளும் அன்பர்
காலமது அறிந்தாளு காளியனைமேவு நற்பந்தியிற்
கர்த்தனுகிக்
கனகநிரை முகில்கள்உறைதரு பனசையிற் பெரிய
கருப்பண்ணசாமி முகிலே. (11)

# பின்னிணைப்பு:

முன்னுள்ள நூல்களின் முதற்பதிப்பில் இடம்பெற்றுள்ள பதிப்புரை, முன்னுரை, சாற்றுக்கவிகள்.

---

உ
சிவமயம்

## திருப்பனசைச் சோழீசர் மாலையும் பதிகமும்

இஃது திருப்பனசையென்று காரணப்பெயரெய்திய நாட்டரசன் கோட்டையிலிருக்கும் நாராயணன் செட்டியார் அவர்கள் குமாரர் ஐயாக்கருப்பன் செட்டியார் அவர்கள் இயற்றியதை ஷை கண. உலகப்ப செட்டியார் அவர்கள் குமாரர் இராமநாதன் செட்டியார் அவர்களால் சென்னை ஞூளை பி. வே. நமசிவாய முதலியாரவர்களது நிரஞ்சனி விலாச அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.

வருடம் 1902

முகவுரை

திருப்பனசை நகரமானது பாண்டித்தலம் பதினன்கி லொன்ருகிய திருக்கானச் சேத்திரத்திற்கு ஐந்து மைல் தூரத்தில் வாயுதிக்கில் உள்ளது. இத்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானுக்கு சோழீசரெனப் பெயர் வந்தது யாதெனின் திருவானைக்காவில் அரசுபுரிந்த விக்கிரமசோழராசன் தபோபலத் தால் தனக்குப் புத்திரியாக் கிடைத்த சுகந்த கேசிக்குவதுவை முயற்சி செய்வதறிந்த அக்கன்னிகை தந்தையைப் பார்த்து எந்தையே நின்னைப் போரில் வெல்லும் அரசனையே யான் மணம்புரிவேன் எனக்கேட்ட அச்சென்னியர்கோன் தன்னை யெவரும் வெல்லுதற்கு அரிதாயிருத்தலாற் சிலநாட்கழிந்த ஒருநாள் கூடலரசான திருக்கானப் பேரூரில் அரசுரிமை நடத்திய வரகுணபாண்டியனேடமர் புரிய அத்தென்னவர் கோனல் தேர்க்காலிற் கட்டப்பட்ட அக்கணத்தே தன் குமாரத்தியை விவாகஞ்செய்து கொடுத்தவன்றிரவில் அம்மாது

சிரோன்மணியும் வரகுணபாண்டியனும் காளீசரைத் தரிசிக்குங் காலையில் அவ்விலிங்கவுருவத்துள் சுகந்த கேசி ஐக்கிய மானதைக் கண்டதிசயமுற்ற பின்னர் அச்சோழன் தன்பதிக்கு எகுமார்க்கத்தில் இச்சிவலிங்கத்தைக் கண்டு அர்ச்சித்தமையால் சோழீசரெனப் பெயர் வழங்கலாயின.

### சாற்றுக்கவிகள்

வேம்பத்தூர் சங்க வித்துவான்களிலொருவராகிய சாமா ஐயரென்கிற ஆண்டியையர் அவர்கள் புத்திரர் சௌந்தரமையர் அவர்களியற்றியது.

### வெண்பா

ஆலைக் கரும்பை யமுதத்தைச் செந்தேனைப்
பாலைத் தித்திக்குமெனப் பன்னுவரா—ஞாலமதில்
நூல்உணார்ஐ யாக்கருப்ப னேன்மையன்செய் சோழீசர்
மாலையைக காதிற்கேட் ட,வர்.

கண்டிப்பட்டி மு முத்துராக்கு சேருவை அவர்களியற்றியது அறுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

துதிகமன வந்தணியப் பொழிந்து செஞ்சொற்
சுரர்உலகார் பனசைநகர்ச் சோழீசன்மீது
அதிகமனத்து ஓட்டத்தை உரப்படுத்தி
அணையிட்டுப் பத்திபிடித் தந்நீர் பாய்ச்சிப்
பதிகமன தினைநட்டு முடித்து மாலை
பண்பாகக் கட்டியொன்றுஞ் சூட்டினனல்
கதிகமன கரஉலகோர் பரவஐயாக்
கருப்பன்எனும் வணிகன்உயர் கலைவல்லோனே.

சிவகங்கை மு. க. முகம்மதிஸ்மால்சாகிபு அவர்களியற்றியது

### ஆசிரிய விருத்தம்

செய்யவாய், முல்லைநகை, யுமையாள்பாகன்
திங்களணி யங்கணன்மேற் சிறப்பதாகத்
துய்யபுகழ்ச் சோழீசர் பதிக மாலை
சொற்றனன் ஐயாக்கருப்ப சுகுணன் கேட்டோர்
மெய்யனைத்துங் குளிர்ந்துசிரக் கம்பஞ் செய்தே
வித்வசிரோன் மணியிவனே யென்றால் இந்த
வையகத்தில் வண்டமிழின் பெருமை என்னால்
வகுத்துரைக்க மிக்கவரி தாகு மாதோ.

வண்டுமலர்த் தேன்உண்டுஇன் னிசைகள் பாடு
மலர்ச்சோலே சூழுந்தென் பனசைமேவும்
கண்டுமொழி, தொண்டையிதழ், உமையாள் பாகன்
கங்கையணி சங்கரன்மேல் களிப்புற்று அன்பாய்த்
தண்டமிழாற் சோழீசர் பதிக,மாலே
சாற்றினன் நாராயணவேள், நெடுநாளிந்த
மண்டலத்திற் செய்ததவத் துதித்தமைந்தன்
வள்ளல்ஐயாக் கருப்பகவி வாணன் மாதோ.

கும்பகோணமிருந்து வந்திருக்கும் நாட்டரசன்கோட்டைத் தமிழ்ப் பாடசாலே உபாத்தியாயர் க. வெள்ளேவாரணம் பிள்ளேயவர்களியற்றியது.

அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

முற்கடந்தா மரைமினெடு நடந்தவந்த முகுந்தனும்நான் முகனுங்காண
சொற்கடந்த அத்துவித அத்துவெனத் துலங்குமெழிற் சோழீசன்ரு
ளிற்கடந்த வந்தமிழ்ப்பா மாலேயொடு பதிகமுமே யிசைத்திட்டானல்
பொற்கடந்தா ன்எனும்முலேயார் மயல்தவிர் ஐயாக் கருப்பப் புலமையோனே.

[கடம்—குடம்]

இப்பதிகம் மாலேயும்அச் சிற்பதிப்பி திட்டனன்திக் கெட்டும் எட்டும்
ஒப்புயர்வில் புகழ்மன்உல கப்பவள்ளல் உளுற்றுதவத் துதித்த சீலன்
மைப்புயலார், கரகமலத் துறுப்பிதழார், மனங்கவரும் வடிவன் மிக்க
செப்புதமிழ் விற்பனர்க்கீ அற்புத்ரா மையனெனுஞ் சீமான் மன்னே.

[மைப்புயல்—கரிய மேகம் போன்ற கூந்தல்;
கரகமலம்—கையாகிய தாமரை; துப்பிதழார்—பவளம்
போன்ற வாயினேயுடைய பெண்கள்]

உ
சிவமயம்

# திருப்பனசைக் கண்ணுடையம்மை மாலையும், பதிகமும், கும்மியும்

இவை, திருப்பனசையென்று காரணப் பெயரெய்திய நாட்டரசன் கோட்டையிலிருக்கும் நாராயணன் செட்டியாரவர்கள் குமாரர் ஐயாக்கருப்பன் செட்டியாரவர்களால் இயற்றப் பட்டு, இரங்கோன் க. ண. க. லெ. வீரப்பசெட்டியார் அவர்களால் இரங்கோன் ஸ்ரீராமர் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப் பெற்றது.

வருடம் 1911

**விளம்பரம்**

பனசை மாநகரமானது பாண்டிநாட்டில் திருக்கானவனத்திற்கு ஐந்துமைல் தூரத்தில் வாயுதிக்கில் உளளது. இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மகாதேவிக்குக் கண்ணுடைய நாயகியெனப் பெயர்வந்தது. யாதெனில் பூர்வம் உமையவள் பின்நடக்கப் போகிற சண்டாசுர சம்மாரத்தின் பொருட்டுப் பரமசிவனால் தனக்குக் கிடைத்த குரூரசாபத்தையேற்று அத்திருக்கான வனமென்னும் சோதிவனத்தில் நீலம் நிறம் பொருந்திய காளியாக அவதரித்து மேற்கூறிய சண்டாசுரனோடருஞ் சமர்புரிய அவ்வமரில் அசுரன் மாயா விசித்திர தந்திர யுத்தங்களைச் செய்து மறைந்தனன் அதுகண்டதேவி தன் கட்பொறிக்கு அன்னோன் தோற்றும் வண்ணம் பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபிரானைக் குறித்து அருந்தவமுயன்று அச்சிவபிரானால் ஞானநேத்திரம் அளிக்கப்பெற்றனள். அதனால் கண்ணுடையநாயகியெனப் பெயர் வழங்கலாயிற்று. இவ்வம்மை பிறவிக்குருடர்களுக்குக் கண்கொடுத்தருளியதும் அவித்த செந்நெல் முளைக்கச் செய்தலுமாகிய அற்புதக் காட்சிகள் பல. அவைகள் விரிக்கிற் பெருகுமாதலின் இம்மட்டினிறுத்தலாயின.

## சாற்றுக்கவிகள்

கண்டிப்பட்டி மு. முத்துராக்கு சேருவை அவர்களியற்றியது.

### ஆசிரிய விருத்தம்

கடல்தழூஉம் உலக,நா யகநக ர்எனத்திகழு கமழுபனசைக்
கண்அதனில், கதிர்,மதி பணியவரு தற்குஏணி நிகரும்
உயர் கனக கோபுரவாயிலார்
திடமுலவு கோயிற் சிறப்பினள், அவித்த நெல்செழியுமுளை
யுண்டாம்படி செய்துஇலகு புதுவைக்கண்ணுடைநாயகி
மீது செந்தமிழ்ப் பதிகமாலே
தொடர்அடியர் சொல்நயப் பன்னூலி ல்இந்நூலு நன்னூ
ல்எனத் துலங்குந் துணைநூல தாகவும், அமுது ஈதுஎனக்
கவிஞர் சொல்லவும், கம்பர்சம்பால்
அடிசேர்ந்த அந்நகரின் முன்முறைப் படிவந்த ஐயாக் கருப்ப
வணிகன் அறிவுசித ருதுஉளந் தன்னையோர் வழிசெய்
துஅறைந்துஇடர் துறந்தனன்அரோ.

சிவகங்கை மு. க. முகமதிஸ்மால்சாகிபு அவர்கள் இயற்றியது.

### ஆசிரிய விருத்தம்

வார்அணியுங் கோட்டுமுலைப், பவளச் செவ்வாய்
வஞ்சியிடை, முத்துநகைக், கரியகூந்தல்,
நாரணி,கண் ணுடையநா யகிதன் மீது
நலமருவு பாமாலே பதிகஞ் சொன்னன்
தாரணியும் புயன்நாரா யணமால் செய்த
தவத்தினல் வந்துஉதித்த தனையன் இந்தப்
பார்அனைத்தும் புகழ்த்திடநற் கீர்த்தி பெற்ற
பாக்கியன் ஐயாக்கருப்பப் பாவ லோனே.
[கோடு—மலே; வஞ்சி—கொடி]

கும்பகோணத்திலிருந்து வந்திருக்கும் நாட்டரசன்கோட்டைத்
தமிழ்ப் பாடசாலை உபாத்தியாயர்
க வெள்ளைவாரணம் பிள்ளை அவர்களியற்றியது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தருஇருக்கு மலர்ப்பொதும்பர் தனிற்களிவண்
டுஇசையிருக்கும் தனத னென்னத்,
திருவிருக்கும் வணிகர்இல்லத் தினிற்கனகத்
திரளிருக்குந், தெவிட்டா ஞான
அருஇருக்கு மாமறையோர் அகத்தில்மக மிகுத்திருக்கும்
அரம்பை மான
உருவிருக்கு மடமகளிர் உளத்தின்அருங் கற்பிருக்கு
முயர்ந்து மாதோ.

[தரு—மரம்; பொதும்பர்—சோலை; தனதனதென—இசையொலி; கனகம்—பொன்; இருக்கு வேதத்தின் இருக்குகள்; மகம்—யாகம்; அரம்பை—தேவலோக அரம்பை; மான—ஒத்த]

இத்தகுசீர் தருந்தென்பனசைத் தலம்வாழ்
கண்ணுடைய விறைவி தாளில்
பத்தியொடுஐ யாக்கருப்ப வித்தகன்சொல்
பாமாலை பதிகந்தன்னை
நத்துபுகழ்ப் பனசைநக ரத்தினில்வாழ்
வீரப்பன் நனிமெய் யன்பு
வைத்தவெழு தாவெழுத்தால் இத்தரைமீது
அச்சிட்டு வழங்கினனே.

[எழுதாவெழுத்து -அச்செழுத்து]

## சாற்றுக்கவிகள்

கண்டிப்பட்டி மு. முத்துராக்கு சேருவை அவர்களியற்றியது.

வெண்பா

காரார் திருப்பனசைக் கண்ணுடைய நாயகிமேல்
சீரார் குமித்தமிழைச் செப்பினனல் – பாரார்
பொருதிக் கருப்புஅமுதம் போலி, இதற் கென்னக்
கருதிக் கருப்பவணி கன்.

[பொருதி—ஒப்பிட்டு; கருப்பு—கரும்பு; போலி – இப்பாவோடு ஒப்பிடும் பொழுதுபோலியாகும்]

கும்பகோணமிருந்து வந்திருக்கும் நாட்டரசன்கோட்டைத் தமிழ்ப்பாடசாலை உபாத்தியாயா
க. வெ. வெள்ளைவாரணம்பிள்ளை அவர்களியற்றியது.

கட்டளைக் கலித்துறை

கம்மிற் பலிகொளு வான்தேவிதாலக் கடிநகர்வாழ்
செம்மின்னிடை அனமா நடைக்கண்ணுடைத் தேவியின்மேற்
கும்மியெனும்புகழ்ப் பாமாலை சொற்றனன் கூர்அறிஞர்
தம்மிற்சிறந்தநல் ஐயாக்கருப்பத் தமிழ்வலனே.

[தாலக்கடி நகர்—பனசைநகர்; அனம்—அன்னம்;

ஸ்ரீமதே ராமாநுஜாயநம ;

# திருப்பனசைப் பெருமாள் வேங்கடாசல மாலை

இஃது திருப்பனசையென்று காரணப்பெயரெய்திய நாட்டரசன்கோட்டையிலிருக்கும் நாராயணன் செட்டியார் அவர்கள் குமாரர் ஐயாக்கருப்பன் செட்டியார் அவர்களால் இயற்றப்பட்டு ஷியூர் நகரத்தாரவர்களால் சென்னை கலாரத்நாகர அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

விசுவாசு ஞு

ஸ்ரீமதே ராமாநுஜாயநம :

## சாற்றுக்கவிகள்

வேம்பத்தூர் சங்கவித்துவான்களில் ஒருவராகிய மகா ா. ா. ஸ்ரீ பிச்சுவையரென்னும் முத்துவேங்கடசுப்பையர் அவர்களால் இயற்றியது.

வெண்பா

பூவிற் கணியாய்ப் புலவோர் செவிக்கினிதாய்
நாவிற் கருஞ்சுவையாய் நல்கினன் — பாவதனல்
மால்வேங்க டாசலப்பேர் மாலையைஐ யாக்கருப்ப
வாலறிவன் உள்ளமகிழ் வாய்.

[வாலறிவன்—தூயஅறிவுடையவன்]

நாட்டரசன்கோட்டை குப்பனையங்காரவர்கள் குமாரர் சோதிடம் சீத்தாராமையங் காரவர்களியற்றியது,

வெண்பா

செய்யாள் உளுறையுந் திருப்பனசை மாநகர்வாழ்
மெய்யார் துளபர்தார் வேங்கடன்மேல் துய்யபுகழ்த்
தேவர்அருந்தமுதாய்ச் செந்தமிழ்ப்பா மாலைசெய்தான்
மாவளர்ஐ யாக்கருப்ப மன்.

[செய்யாள்—திருமகள்; துளபத்தார்—துளசிமாலை;]

கண்டிப்பட்டி மு முத்துராக்கு சேர்வை அவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருப்பனசைப் பதிமேவும் வேங்கடா சலபதிமேற் சிறப்பா
ஐயாக்
கருப்பன்நசை யாற்கடித மடலெனுநந் தனவனத்திற் கவினப்
பூத்திட்
டுஇருப்பனசை யில்லெழுதா மலர்கள்பறித் தின்நார்கொண்
டுஇத மதாக
மருப்பனசை யாதிலங்க மாலேகட்டிச் சூட்டி,மன மகிழ்ந்தான்
மாதோ.

[நசை – விருப்பம்; கடிதமடல் எனும் நந்தவனத்தில்—தாள்கள் என்ற தோட்டத்தில்; பனசையில்—ஓலேயில்; எழுதாமலர்கள்—ஓலேயில் எழுதாமலர்கள்.]

மாம்பட்டி பெ. ரி. பெரிச்சியப்ப ஆசாரியாரவர்கள் குமாரர் வெள்ளேச்சாமி ஆசாரியார் அவர்கள் இயற்றியது.

ஆசிரிய விருத்தம்

சீதரன், வாமனன், நாரணன், கேசவன், செங்கண்மால்,
சங்கபாணி,
திகழ்உந்திபூத்தவன், உவணமதுயர்த்தவன்,
திருவிக்கிரமன், முராரி,
மாதவன். மாயவன், மாநிலம் அளந்தவன், மாமலர்த்
திருமணளன்,
வளமிகுந் தென்பனசை வேங்கடேசப்பெரு மாள்மலர்த்
தாளில் அன்பாய்ப்
போதமருவும்புகழ்ப் பைந்தமிழ்ப் புலவர்கள் புகழுப் ஐ
யாககருப்பப்
பூமான்,உரைத்தமா மாலேக்குமேஇணே புகலுதற்கு
அரிதாம்என

வேதனுங்கமலத்து ஒளித்தனன், கும்பமுனி வெட்கியே வெற்புற்றனன்
மின்னுமணிபன்முடிச் சேடனும்பாதள மீதினிற் புக்கினனே.

[உந்திபூந்தவன்—கொப்பூழில் நான் முகனைக் கொண்டவன்; உவணம்—கருடக்கொடி சேடன்—ஆதிசேடன் போதம்—அறிவு; வேதன்—நான்முகன்; கும்பமுனி—அகத்தியன்; வெற்பு—பொதிகைமலை

கும்பகோணத்திலிருந்து வந்திருக்கும் நாட்டரசன்கோட்டைத் தமிழ்ப் பாடசாலை உபாத்தியாயர். சு. வெள்ளைவாரணம்பிள்ளை அவர்கள் இயற்றியது

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

கள்ளிருக்கும் மெல்இதழ்ப்பூங் கமலமிசைப் பொன்போற்செங் கவின்சூட் டுஅன்னப்
புள்ளிருக்கும் தடம்பனசைப் புரியில்உறை வேங்கடமால் பொன்தாள்மீது
வள்ளிருக்கும் பாமாலை சூடினன்நா ராயணவேள் மகவாய் வந்த
தெள்ளிருக்கு மதியுடையோன் வணிக ஐயாக்கருப்பனெனுஞ் சீமான்மன்னே.

[தெள்ளிருக்கும்—தெளிவுடைய; மதி—அறிவு.

இந்தநற்பாமாலை தனைச்,சிந்தை மகிழ்ந்தே,யச்சில் இயற்றினால்
செந்திருவாரும் புயநல்லைந்தருவாருங் கமலச்செங் கையார்சீர்
தந்தபுகழ்வணிகர் குலச்சுந்தரராம்பன சைபுரிதவத் தால்பாரில்
வந்தவர், நந்தாது அறஞ் செய்யுந்திறமை வாய்ந்தநகரத் தார்மாதேர.

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :

# திருப்பனசை இராமாநுஜ தரிதச வெண்பா

இஃது திருப்பனசையென்னும் நாட்டரசன்கோட்டையிலிருக்கும் இளையாத்தக்குடியில் கழனிவாசற்குடியார் நாராயணன் செட்டியார் அவர்கள் குமாரர் நா கரு ஐயாக்கருப்பன் செட்டியார் அவர்களால் இயற்றப்பட்டு தெள்ளியன் வயலிலிருக்கும் ஸ்ரீ.முத்துவையங்கார் அவர்கள் குமாரர் பிரம்மஸ்ரீ சீநிவாசையங்கார் அவர்களால் சென்னை கலாரத்நாகர அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

பராபவ ஹூ ஆனி மீ 1902

ஸ்ரீமதே ராமாநுஜாயநம :

சாற்றுக்கவி

கும்பகோணமிருந்து வந்திருக்கும், நாட்டரசன்கோட்டைத் தமிழ்ப் பாடசாலை உபாத்தியாயர் சு. வெள்ளைவாரணம் பிள்ளை அவர்கள் இயற்றியது.

வெண்பா

பூமா னுடர், உய்யப் போதந் தனைஅருளி
ராமா நுஜவெண்பா நன்கிசைத்தான்—பாமானுஞ்
செந்தமிழ்ஆ ரும்பனசைச் செல்வன்நா, ராயணவேள்
மைந்தன்ஐ யாக்கருப்ப மால்.

[ பொருள்—ஞானம் ]

விருத்தம்

சந்தமறை அந்தணர் குலச், சீநீ வாசநற்
சற்குணன் தெள்ளியன் வயல்
வந்தருள் சிறந்த,குரு தந்தசோ திடமுறை
வகுத்துரைக்கின்ற நாவான்,
அம்திரு நிறைந்தபன சைக்கருப் பேந்திரன்
ஐயன்,ரா மாநுஜற்குச்
செந்தமிழி னில்தந்த பாவைஅச் சிட்டுச்
சிறந்திட அளித்தான் மாதோ.

[கருப்பேந்திரன் ஐயன்—ஐயாக்கருப்பன்]

கண்டிப்பட்டி மு. முத்துராக்கு சேருவை அவர்கள் இயற்றியது.

வெண்பா

ஒப்பிலா ராமா நுஜமுனிமேல் ஓர்ந்திட்டு
முப்பதுவெண் பாவாய் மொழிந்திட்டான்—செப்பும்
பொருப் பன்என்றும் போற்றப் பனசைஐயாக்
கருப்பன்என்ற நாமவணி கன்.

[பொருப்பன்—அகத்தியன்]

இஃது ஷை நாட்டரசன்கோட்டை நாராயணன் செட்டியார் குமாரரும் இளையாற்றக்குடியிற் கழனிவாசற்குடியானும் ஷை சுவாமிக்கிக் குடியடிமையும் ஷை கண்ணுடையநாயகிம்மன் மாலை, பதிகம், கும்மி, சோழீசர் மாலை, பதிகம், வேங்கடாஜல மாலை, இராமாநுஜதிரிதசவெண்பா, குன்றக்குடி முருகக்கடவுள் பதிகம் அரண்மனை சிறுவயல் மும்முடிநாதயீஸ்வரர் பதிகம் இவைகள் இயற்றியவருமாகிய நா. கரு. ஐயாக்கருப்பன் செட்டியாராலியற்றியதை ஷை சுவாமிக்கி குடியடிமையும் ஷை கழனிவாசற்குடியானுமான நாட்டரசன்கோட்டை வெ. க. சு. சின்னய்யா செட்டியாரவர்கள் குமாரர் லெட்சுமணன் செட்டியாரால் சிவகங்கை ஸ்ரீகலா அச்சுக் கூட்டத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

1909 சவுமிய வருஷம் சித்திரை மாதம்

சாற்றுக்கவிகள்

நாட்டரசன்கோட்டையிலிருக்கும் குப்பனய்யங்கார் குமாரரும் ஜோதிட பண்டிதருமான சீதாராமய்யங்கார் அவர்கள் இயற்றியது.

பொன்ஆரும் எழில்பனசைப் பெரியகருப்பணசுவாமி
பூத்தாட்குஇன்பம்
மன்னுதமிழ்ப் பதிகம்ஐய்யாக் கருப்ப வணிகக்கவிஞன்
வழுத்தக் கேட்டுச்

சொல்நாலு மறைக்குரியர் அரசர்,தனவணிகரும் சூத்திரரும்
தூய
நல்நாவிற் கினியதுஎன்றூர், நாவலர் பாக்கண்டு
பயநமக்கென்றூரே.

[பூந்தாட்டு-பூப்போன்ற அடிக்கு; பயநமக்கு-பயன்நமக்கு]

இந்நூல் இயற்றியவர் குமாரன் நாராயணன் செட்டியார் அவர்கள் இயற்றியது.

வெண்பா

செங்கமலத் தாள்உறையுஞ் செய்ய திருப்பனசை
தங்கும் பெரிய கருப்பண்ணன் தன்மேல்—துங்கமிகும்
பக்திநவ ரசப்பாப் பண்ணின ன்என்ஐ கருப்ப
வித்வஜனன்பூ மகிழவே.

[துங்கம்—சிறப்பு; என்ஐ—என்தந்தை; வித்வஜனன் படித்தபுலவர்]

அச்சிட்டவர் பெயர்

துதிக்கு ம்அடியார்க்கருளும் பெரியகருப்பணசுவாமி துணைத்
தாட்கு அன்பாங்
கதிக்கு நலந்தரும் பதிகந்தனைக் கருப்ப வணிகனெனுங்
கவிஞன் சொல்ல
விதிக்கும் மகபதிக்கும்அரி, மறைக்குஅரிய விடையவன்மேல்
மிகுந்தபக்தி
பதிக்கும் இலக்குவ வணிகப் பாக்கியவான்அச் சதனிற்
பதித்தான் மன்னே.

[விதிக்கும்— நான்முகனுக்கும்; மகபதி—இந்திரன்;
அரி—திருமால்; விடையவன் —சிவன்]

